உ

திருச்சிற்றம்பலம்

# சேக்கிழார் செந்நெறி

ஆசிரியர்

வித்துவான் வை. இரத்தினசபாபதி, எம்.ஏ.,பி.ஓ.எல்.

திருநாகேசுவரம்

திரு. எஸ். எஸ். முதலியார் அவர்களின்

மணிவிழா வெளியீடு.

21—11—73

கிடைக்குமிடம் :

தமிழ்நாடு தெய்விகப் பேரவை

9, மகாராஜா சூரியராவ் சாலை,

ஆள்வார்பேட்டை, : : சென்னை — 600018.

உ

திருச்சிற்றம்பலம்

## சேக்கிழார் துதி

—:o:—

தில்லைவாழ் அந்தணரே முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாந் திருத்தொண்டத் தொகையடியார்
பதம் போற்றி

ஒல்லையவர் புராணகதை உலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழார் அடிபோற்றி

கருங்கடலைக் கைநீத்துக் கொள எளிது முந்நீர்க்
கடற்கரையின் நொய்மணலை எண்ணிஅள விடலாம்
பெருங்கடல்மேல் வருந்திரையை ஒன்றிரன்டென்
றெண்ணி
பிரித்தெழுதிக் கடை இலக்கம் பிரித்துவிட லாகும்
தருங்கடலின் மீனை அளவிடலாகும் வானத்
தாரகையை அளவிடலாம் சங்கரன்தாள் தமது
சிரங்கொள் திருத் தொண்டர்புராணத்தை அள விடநம்
சேக்கிழார்க் கெளிதலது தேவர்க்கும் அரிதே !

—உமாபதி சிவம்

திருச்சிற்றம்பலம்

உ

திருச்சிற்றம்பலம்

# சேக்கிழார் செந்நெறி

ஆசிரியர்

வித்துவான் வை. இரத்தினசபாபதி, எம்.ஏ.,பி.ஓ.எல்.

திருநாகேசுவரம்

திரு. எஸ். எஸ். முதலியார் அவர்களின்

மணிவிழா வெளியீடு.

21—11—73

கிடைக்குமிடம் :

தமிழ்நாடு தெய்விகப் பேரவை

9, மகாராஜா சூரியராவ் சாலை,

ஆள்வார்பேட்டை, : : சென்னை — 600018.

கடிய வெய்ய இருவினையின்
　　களைகட்டு எழுந்து கதிர் பரப்பி
முடிவு இலாத சிவ போகம்
　　முதிர்ந்து முறுகி விளைந்ததால். 121

## 60. என்றும் இன்பம் பெருக

என்றும் இன்பம் பெருகும் இயல்பினல்
ஒன்று காதலித்து உள்ளமும் ஓங்கிட
மன்றுளார் அடியார் அவர் வான்புகழ்
நின்றது எங்கும் நிலவி உலகெலாம். 122





உ

திருச்சிற்றம்பலம்

## சேக்கிழார் துதி

—0—

தூக்கு சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி
வாக்கினாற் சொல்ல வல்லபிரான் எங்கள்
பாக்கியப் பயனாப்பதி குன்றை வாழ்
சேக்கிழான் அடி சென்னி இருத்துவாம்

—காஞ்சிப்புராணம்

தொகையா நாவ லூராளி
    தொடுத்த திருத்தொண் டப்பெருமை
வகையால் விளங்க உயர் நம்பி
    யாண்டார் வகுப்ப மற்றதனைத்
தகையா அன்பின் விரித்துலகோர்
    தம்மை அடிமைத் திறப்பாட்டின்
உகையா நின்ற சேக்கிழான்
    ஒளிர்பொற் கமலத் தாள்பணிவாம்

—திருவானைக்காப்புராணம்

வாழிதில்லை மணி மன்றுள் என்றும் நடம்
ஆடும் அங்கணர் மலர்ப்பதம்!
வாழிகாழிநகர் வாழவந்த திரு
நெறியராதிபதி வள்ளல் தாள்
வாழி அன்பர்திரு நீறுமிட்ட திரு
முண்ட முந்துவய கவசமும்
வாழி குன்றைமுனி சேனையாதிபதி
வாய்மலர்ந்தருள் புராணமே!

தேசிலங்குமுகில் குன்றையாதிபதி
தொண்டர் சீர்பரவு சேக்கிழார்
வாசல் அன்று முதல் இன்று காறும் இனி
மேலும்வாழையடி வாழையாய்
வீசுதென்றல் மணி மண்டபத்தரசு
வீற்றிருக்கும் முடி மன்னருக் (கு)
ஈசன் அன்பர்கள் புராணமும் சொலி
அமைச்சும் ஆகி நலம் எய்துமால்

—உமாபதி சிவம்.

பாரி அச்சகம் சென்னை-1

உ
திருச்சிற்றம்பலம்

## சேக்கிழார் துதி

—∘°∘—

தில்லைவாழ் அந்தணரே முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாந் திருத்தொண்டத் தொகையடியார்
பதம் போற்றி

ஒல்லையவர் புராணகதை உலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழார் அடிபோற்றி

கருங்கடலைக் கைநீத்துக் கொள எளிது முந்நீர்க்
கடற்கரையின் நொய்மணலை எண்ணிஅள விடலாம்
பெருங்கடல்மேல் வருந்திரையை ஒன்றிரண்டென்
றெண்ணி
பிரித்தெழுதிக் கடை இலக்கம் பிரித்துவிட லாகும்
தருங்கடலின் மீனை அளவிடலாகும் வானத்
தாரகையை அளவிடலாம் சங்கரன்தாள் தமது
சிரங்கொள் திருத் தொண்டர்புராணத்தை அள விடநம்
சேக்கிழார்க் கெளிதலது தேவர்க்கும் அரிதே !

—உமாபதி சிவம்

திருச்சிற்றம்பலம்

உ

திருச்சிற்றம்பலம்

# சேக்கிழார் செந்நெறி

ஆசிரியர்

வித்துவான் வை. இரத்தினசபாபதி, எம்.ஏ.,பி.ஓ.எல்.

திருநாகேசுவரம்

திரு. எஸ். எஸ். முதலியார் அவர்களின்

*மணிவிழா வெளியீடு.*

**21—11—73**

கிடைக்குமிடம் :

தமிழ்நாடு தெய்விகப் பேரவை

9, மகாராஜா சூரியராவ் சாலை,

ஆள்வார்பேட்டை, : : சென்னை — 600018.

முதற்பதிப்பு நவம்பர் 1973

1000 பிரதிகள்

விலை 50 காசு

இந்நூலின் விற்பனைத்தொகையைக் கொண்டு
பெரியபுராணம் பற்றிய இதர நூல்கள் வெளியிடப்பெறும்.

பாரி அச்சகம், சென்னை-1.

தவத்திரு குன்றக்குடி அடிகளார்,
தலைவர்
தமிழ்நாடு தெய்விகப்பேரவை

ஆள்வார்பேட்டை
சென்னை - 18.
18-11-73

# ஆசியுரை

திருநாகேசுவரம் திருத்தலம் சேக்கிழாரின் திருவுள்ளத்தில் பதிந்த திருத்தலம். அருள்மிகு நாயன்மார்களின் திருவருட் பெருக்கினைத் தமது உள்ளத்தே தேக்கி—பக்திச் சுவைநனி சொட்டச் சொட்டத் திருத்தொண்டர் மாக்கதை தந்த சேக்கிழார் நாளும் தொழுது போற்றிய திருத்தலம். திருநாகேசுவரத் திருத்தலம் நீண்ட இடைவெளிக்குப் பிறகு மீண்டும் சேக்கிழார் புகழ் பாடிப் பரவமுன் வந்துள்ளது. சேக்கிழார் மரபில் தோன்றிய **சிவத்திரு எஸ். எஸ். முதலியார்** அவர்கள் நல்ல சிவநெறி அன்பர். சேக்கிழார் பெருமானிடத்தில் தோய்ந்த அன்பினர்; அரன் பூசை இயற்றும் இயல்பினர்; சிவம் பெருக்கும் சீலர்களிடத்தில் அயரா அன்பினர்; ஆண்டு தோறும் சேக்கிழார் விழாப் பொலிவுடன் எடுத்து இதயம் மகிழும் இயல்பினர். இத்தகு சீரிய நல்லன்பர் சிவத்திரு எஸ். எஸ். முதலியார் அவர்கள் மணி விழாப் பொலிவு காண்பதும் — மணி விழாவில் **சேக்கிழார் செந்நெறி** வெளிவருதலும் மகிழ்வைத் தருகிறது. சேக்கிழார் செந்நெறி — என்ற பெயரில் வெளிவரும் இந்நூல் — சேக்கிழார் தந்த அருட் பாடல்களின் தொகுப்பு. சேக்கிழார் பாடல்களைத் தொகுப்பது இயலாத ஒன்று. பாடல் ஒவ்வொன்றும் தேனினும் இனிய சுவையுடையது. ஊனுக்கும் உயிருக்கும் இதம் அளித்து இன்பம் பயப்பது; அவற்றை பூம்புகார்ப் பேரவைக் கல்லூரித் தத்துவத் துறைப் பேராசிரியர், ஞானத் தமிழ்சுரர் திரு. வை. இரத்தின சபாபதி அவர்கள் தொகுத்துள்ளார். இந்த நூல் வெளிவரத் தூண்டித் தொண்டு நெறிக்கு ஆளாக்கியவர் — சேக்கிழார் தாசன் திருமிகு இராமசேஷன் ஆவார். **சேக்கிழார் செந்நெறி** எஸ். எஸ். முதலியார் அவர்களின் பொருட் பயனாக — பேரவை மூலம் வெளிவருகிறது. அன்பர்கள் படித்துப் பயனடைய வேண்டும் என்பது நமது விருப்பம்.

சிவத்திரு எஸ். எஸ். முதலியார் அவர்கள் முத்து விழாவும் — பவள விழாவும் — வைர விழாவும் காணத் தக்கவாறு அம்மை அப்பன் திருவருளால் வளர்க! வாழ்க!

இன்ப அன்பு
**அடிகளார்**

# பதிப்புரை

"பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவி வலவர்" சேக்கிழார் பெருமான். அவர் அரிய திறமைக்கு எடுத்துக் காட்டாகத் திகழ்வது 'திருத்தொண்டர்புராணம்' எனப்பெறும் பெரியபுராணம். அறுபத்து மூவர் வரலாற்றை இயற்றும் பொழுது ஆங்காங்கே தமிழர் வாழ்க்கையில் கடைபிடித்து ஒழுகிய-அனைவரும் கைக் கொள்ள வேண்டிய செம்மைமிகு நெறிகளை, தனக்கே உரிய செந்தமிழ்ப்பாக் களால் அருளினார்.

சேக்கிழார் பெருமான் அப்படிக் கூறியுள்ள செந்நெறிப் பாக்களைத் திரட்டி ஒரு நூலாக வெளியிட வேண்டுமென்பது பேரவைத் தலைவர், அருள் நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களது திரு உள்ளம், இதற் குரியன செய்யப் பூம்புகார்ப் பேரவைக் கல்லூரிப் பேரா சிரியர், ஞானத்தமிழாகரர், வித்துவான் திரு. வை. இரத்தின சபாபதி, எம். ஏ., பி ஓ. எல்., அவர்களைப் பணித் தருளினார்கள். தவத்திரு அடிகளார் அவர்களது திருவுள்ளம் நிறைவு கொள்ளும் வகையில் அவர் இதைத் தொகுத்துத் தந்தார்கள். அவர்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்ளு கிறேன்.

இந்நூலைத் தம் மணிவிழா வெளியீடாகப் பதிப்பிக்கப் பொருளுதவி அளித்தவரும், சேக்கிழார் பெருமான் எழுந் தருளியிருந்த தலமாகிய திரு நகேசுரத்தைச் சேர்ந்தவரு மாகிய சிவநெறித் தொண்டர் திரு எஸ். எஸ். முதலியார் அவர்களுக்கும், மிக்க குறுகிய காலத்தில் செவ்வனே அச்சிட் டுத்தந்த பாரி அச்சகத்தாருக்கும் இதன் மூலம் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழ் மக்கள், 'சேக்கிழார் செந்நெறி' யினைக் கடைப் பிடிக்க இந்நூலைப் பெரிதும் பயன்படுத்திக் கொள்வார்கள் என நம்புகிறேன்.

9. மகாராஜா சூரியராவ்சாலை
சென்னை-18
20-11-73

அ நாராயணசாமி
செயலாளர்
தமிழ்நாடு தெய்விகப்பேரவை

# சேக்கிழார் வரலாறு

"சான்றோருடைத்துத் தொண்டைநாடு" என்பது பழமொழி. அச்சிறப்பு வாய்ந்த தொண்டை நாட்டிலே, குன்றத்தூரிலே, வேளாண் மரபிலே சேக்கிழார்குடி என்றொரு குடியுண்டு. அக்குடியில் 'அருண்மொழித்தேவர்' தோன்றினர். அவருக்குப் பின் பாலறுவாயர் பிறந்தார். முன்னவரால் சேக்கிழார் மரபு விளங்கப் பெற்றது. அதனல் அவருக்குச் **சேக்கிழார்** என்னும் சிறப்புப் பெயர் வழங்கலாயிற்று.

அருண்மொழித்தேவர், கல்வி கேள்விகளில் வல்லவரானர்; சிவபத்தி, சிவனடியார் பத்தியிற் சிறந்து விளங்கினர். அவர்தம் பெருமை அநபாயச் சோழருக்கு எட்டிற்று. அச்சோழர் அருண் மொழித் தேவரை முதலமைச்சராக்கினர். அருண்மொழித் தேவருக்கு உத்தமச் சோழப் பல்லவர் என்னும் பட்டம் சூட்டப்பட்டது.

அருண்மொழித்தேவர் சோழ நாட்டிலுள்ள திரு நாகேச்சுரம் என்னும் திருப்பதியினிடத்துப் பேரன்பு செலுத்தி வந்தார். அவ்வன்புக்கு அறிகுறியாக அவர் தமது குன்றத்தூரிலே ஒரு திருக்கோயில் கட்டினர். அத் திருக்கோயிலுக்குத் திருநாகேச்சுரம் என்னும் திருப்பெயர் சூட்டி ஆண்டவனை வழிபட்டு வந்தார்.

அந்நாளில் சீவக சிந்தாமணி என்னும் நூல் பேராக்கம் பெற்றிருந்தது. அநபாயச் சோழரும் அந் நூலின் கண் மயக்குற்றர். 'அரசன் எவ்வழி அவ்வழி குடிகள்"

முதலமைச்சராகிய சேக்கிழார் பெருமான் ஒரு நாள் மன்னரைப் பார்த்து, 'நீர் சைவர்; சிவகதையைக் கேளாது, அவ கதையை ஏன் கேட்கிறீர்?', என்று கேட்டார். அதற்கு மன்னர், "சிவகதை எது? அதன் வரலாறு என்னே?"என்று வினவினர். சேக்கிழார் பெருமான், " திருத்தொண்டத்தொகையைப் பற்றி நீர் கேள்வியுற்றிருக்கலாம். அது தியாகேசப் பெருமானால் அடி எடுத்துக் கொடுக்கப் பெற்றது; சுந்தர மூர்த்தி சுவாமிகளால் அருளிச் செய்யப் பெற்றது. நம்பியாண்டார் நம்பி என்பவர் அத் திருத்தொண்டத்தொகையைத் தழுவி ஒரு திருவந்தாதி பாடினர். அத்திருவந்தாதி, அபயகுலசேகரசோழர், சிவாலய முனிவர் முதலிய பெரியோர்களால் போற்றப் பெற்றது" என்று கூறினர். அநபாயச் சோழர் திருவந்தாதியை ஓதிப் பொருளுரைக்குமாறு சேக்கிழாரைக் கேட்டார். சேக்கிழார் அவ்வாறே செய்தார். மன்னர் அவ்வன்பின் வயப்பட்டு, "அடியவர் வரலாறுகளைக் காவியமாகச் செய்தருளும்" என்று சேக்கிழார் பெருமானை வேண்டினர்; அதற் கெனப் பொருளும் வழங்கினர்.

சேக்கிழார் பெருமான் தில்லையை அடைந்தார்; தில்லைக் கூத்தனைக் கண்டார்; தொழுதார்; திருமுன்னே நின்று, "பெருமானே! திருத் தொண்டர் அருட் பெருஞ் செயல்களைக் காவியமாகப் பாடுதல் வேண்டும் அதற்கு அடிகள் அடி எடுத்துக் கொடுத்தருளல் வேண்டும் என முறையிட்டார். அவ்வேளையில் தில்லைக்கூத்தன் அருளால் "**உலகெலாம்**" என்றொரு வானொலி எழுந்தது. அவ் 'உலகெலாம்' என்பதையே முதலாகக் கொண்டு, சேக்கிழார் பெருமான் திருத் தொண்டர் புராணத்தைப் பாடி முடித்தார்.

அநபாயச் சோழர்; நூல் முற்றுப் பெற்றதைக் கேள்வியுற்றார்; தில்லையை நோக்கினர். சேக்கிழாரும் மற்றவரும் மன்னரை எதிர் கொண்டனர். சேக்கிழாரின் திருமேனிப் பொலிவு, மன்னர் உள்ளத்தைக் கவர்ந்தது. மன்னர் சேக்கிழார் பெருமான் திருவடியில் விழுந்து வணங்கினர். பின்னர் எல்லாரும் ஒன்று சேர்ந்து திருச் சிற்றம்பலத்தை அடைந்தனர். அப்பொழுது "மன்னனே! நாம் **'உலகெலாம்'** என்று அடி எடுத்துக் கொடுத்தோம். சேக்கிழார் அதனை முதலாகக் கொண்டு திருத் தொண்டர் புரணத்தைப் பாடி முடித்தான். திருத் தொண்டர் திறங்களை நீ கேட்பாயாக!" என்று ஓர் ஒலி வானில் எழுந்தது. அது கேட்ட மன்னர், திருத் தொண்டர் புராணத்தைக் கேட்டுப் பேறெய்துமாறு அன்பர்களுக்கு அழைப்புக்கள் விடுத்தார்.

தில்லைக்கூத்தன் திருமுன்னர் திருத்தொண்டர் புராணப் பிரசங்கத்துக்குரிய ஏற்பாடுகளெல்லாம் குறைவறச் செய்யப்பட்டன. நாலு பக்கங்களினின்றும் அடியவர்கள் போந்து குழுமினர்கள். மன்னர் சேக்கிழார் பெருமானை வேண்டச் சேக்கிழார் பெருமான், திருப்புராணத்தை ஓதிப் பொருளுரைக்கத் தொடங்கினர். அத்தொண்டு சித்திரைத் திங்களில் திருவாதிரை நாளில் தொடங்கப் பெற்றது; மறுஆண்டு அதே திங்களில் அதே நாளில் முற்றுப் பெற்றது.

மன்னரும் மற்றவரும் ஆனந்தக் கடலில் தோய்ந்தனர் எல்லாரும் அன்புருவராயினர். மன்னர் பெருமான் திருத் தொண்டர் புராணத்தை யானை மீதேற்றினர்; சேக்கிழார் பெருமானையும் அதன்மீது எழுந்

தருளச் செய்தார் ; தாமும் ஏறி வெண்சாமரம் வீசினுர். யானை திருவீதி வலம் வந்தது. எல்லாரும் உடன் சூழ்ந்து சென்றனர்; யானை வலம் வந்து சிற்சபை முன் நின்றது. அடியவர்கள் யானையைச் சூழ்ந்து மிடைந்து நின்றுர்கள். திருத் தொண்டர் புராணம் திருமுன்னே வைக்கப்பட்டது. மன்னர் பெருமான் சேக்கிழார் பெருமானுக்குத் "தொண்டர் சீர்பரவுவார்" என்னும் திருநாமம் சூட்டி வணங்கினுர். அங்கிருந்த மற்றெல்லாரும் தொண்டர் சீர்பரவுவாரைத் தொழுது ஆரவாரித்தனர். பின்னர் அநபாயச் சோழர், திருத் தொண்டர் புராணத்தை மற்றத் திரு முறைகளுடன் சேர்த்துச் சிறப்புச் செய்தனர். திருத் தொண்டர் புராணம் "**பன்னிரண்டாந்திருமுறை**" என்று வழங் லாயிற்று.

அநபாயச் சோழர் அங்கிருந்தவர்களைப் பார்த்து, இத் தொண்டர் சீர்பரவுவாருடைய தம்பியார் பாலரு வாயர் எங்கே இருக்கிருர்" என்று கேட்டார். அவர்கள் பாலருவாயர் குன்றத்தூரிலே திருநாகேச்சுரப் பெரு மானுக்குத் திருத்தொண்டு செய்து கொண்டிருக்கிருர், என்று சொன்னுர்கள். மன்னர் பெருமான் பாலரு வாயரை அழைப்பித்தார். அவருக்குத் 'தொண்டமான்' என்னும் நாமம்சூட்டினுர்;அவரை முதலமைச்சராக்கிக் கொண்டார்.

சேக்கிழார் பெருமான் தில்லையிலேயே தங்க லானுர்; நாடோறும் தில்லைக் கூத்தனை வழிபட்டு வந்தார். சிவபெருமான் அவருக்குத் தமது திருவடி நீழலை வழங்கினுர்.

---

உ

திருச்சிற்றம்பலம்

# சேக்கிழார் செந்நெறி

## (1) கடவுள் வாழ்த்து

**உலகெலாம்** உணர்ந்து ஓதற்கு அரியவன்
நிலவு உலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத்து ஆடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்

திருவருட் பெருஞ் செல்வராகிய சேக்கிழார் பெருமான் தென்தமிழ் நாடு உய்யத் திருவாய் மலர்ந்தருளுந் திருத்தொண்டினை ஏற்கத் தில்லைப்பதியில் கூத்தப் பெருமான் திருமுன்னர் நின்று வணங்கும் போது இறைவன் அசரீரியாக எடுத்துக் கொடுத்த சொல் '**உலகெலாம்**' என்பது. அதையே முதலாகக் கொண்டு திருத்தொண்டர் புராணத்தைத் தொடங்கி முடித்தார்.

## பொழிப்புரை

உலகவர்களால் இவ்விறைவன் இப்படியன் இவ்வண்ணத்தன் என்று உணர்ந்து கூறுவதற்கு அருமையானவனும்; நிலவு தவழுகின்ற, நீர் நிறைந்த சடையை உடையவனும்; அளவிட்டுக் கூறமுடியாத பேரொளியாக விளங்குபவனும்; தில்லைத் திருச்சிற்றம்பலத்தில் ஆனந்தக் கூத்து ஆடுபவனும் ஆகிய இறைவனின் தாமரை மலர் போன்ற, சிலம்பு அணிந்த திருவடிகளை வாழ்த்தி வணங்குவோம்.

## 2. திருக்கூட்டம்

மதிவளர் சடைமுடி மன்றுளாரை முன்
துதிசெயும் நாயன்மார் தூய சொன்மலர்ப்
பொதிநலன் நுகர்தரு **புனிதர் பேரவை**
விதிமுறை உலகினில் விளங்கி வெல்கவே.

திருவாரூர்த் திருக்கோயிலில் தேவாசிரிய மண்டபத்தின் கண்ணே அமர்ந்துள்ள அடியவர் திருக்கூட்டத்தை வாழ்த்தும் செய்யுள் இது.

சேக்கிழார் பெருமான் தில்லையில் கூத்தப் பெருமானை வாழ்த்தி வணங்கியதும். அடுத்த வாழ்த்தாகத் திருக்கூட்டத்து வாழ்த்தினை அமைத்தருளுகின்றார்.

**(பொழிப்புரை)** இளம் பிறையானது வளர்கின்ற சடை மகுடத்தையுடைய, தில்லைப் பொது அரங்கில் ஆடும் இறைவனை, அவன் திருமுன் நின்று, இசைப்பாக்களால் வணங்கும் நாயன்மார்களுடைய திருவாக்குகளினின்றும் வெளிப்பட்ட, தூய்மையுடைய சொன்மலர்களாகிய திருமுறைகளில் பொதிந்து கிடக்கின்ற, நலம் பல விளைக்கும் பக்திச்சுவை முதலிய சுவைகள் பலவற்றையும் நுகர்ந்து மகிழ்கின்ற தூய சான்றோர்களுடைய பெருமை பொருந்திய அவைக்களம், அளவையியலுக்கு இயைய அமைந்த தத்துவக் கொள்கையாலும், அனுபவத்துக்கு இயைய அமைந்த ஒழுக்க முறையாலும் இவ்வுலகில் விளங்கியும் வெற்றி பெற்றும் வாழ்வதாகுக.

புனிதர் பேரவையானது **விதியால்** விளங்கியும் **முறை** யால் வென்றும் வாழ்க. **விதி** - தத்துவ அமைப்பு: **முறை** - அனுபவத்துக்கியைந்த சமய வொழுக்கம்.

இறைவனுல் அருளப் பெற்ற உரைகளை ஆய்ந்து, அவைகளை அனுபவப் பொருளாக்குவதை விடுத்து. இறைவனை

முன்னாக வைத்து அனுபவித்துத் துதிக்கின்ற நாயன்மார் களின் திருவாக்குக்களாகிய திருமுறைகளை ஆராய்ந்து தத்துவக் கொள்கையை அறிந்தும், சமய வொழுக்கை நுகர்ந்தும் வளர்கின்ற **புனிதர் பேரவை.**

திருமுறைகளைச் செயற்படுத்துவதே இற்றைத் '**தெய் விகப்பேரவையின்** செயலாக மலர்ந்ததும் இச் செய்யுளைக் கருத்திற் கொண்டே.

## 3. திருத் தொண்டர் புராணம் எனும் பெயர்

இங்கு இதன் நாமம் கூறின் இவ்வுலகத்து முன்னாள்
தங்கு இருள் இரண்டில் மாக்கள் சிந்தையுள் சார்ந்து நின்ற
பொங்கிய இருளை ஏனைப் புற இருள் போக்குகின்ற
செங்கதிரவன் போல் நீக்கும் **திருத் தொண்டர் புராணம்**
என்பாம். *(3)*

திருத்தொண்டர்கள் இவ்வுலகில் மக்களாய்ப் பிறந்து வாழ்ந்தவர்கள். அவர்கள் வரலாறு ஏனை மக்களுக்கு வாழ் வியல் ஊன்று கோலாக நின்று, அவர்களைக் கரையேற்ற வல்லது ஆகையால், திருத்தொண்டர்கள் வரலாற்றை "**எடுக்கும் மாக்கதை**'' என்று கூறுகிறார் சேக்கிழார்.

'பெரியபுராணம்' என இந்நாளில் வழங்கப் பெறும் திருத்தொண்டர் மாக்கதைக்கு ஆசிரியர் சேக்கிழார் அமைத்த பெயர் '**திருத் தொண்டர் புராணம்**' என்பதே.

இவ்வுலகில் உள்ள இருள் இரண்டு. *(1)* எல்லாப் பொருள்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டு அவைகளை வெளிக்காட்டாமல் தன்னை மட்டுமே காட்டுகின்ற இருட்டு. இது புற இருள். *(2)* மக்களின் உள்ளத்தைச் சார்ந்து நிற்கும் இருட்டு. இது அக இருள். புறத்தே காணப்படும் இருளைச் சூரியன் நீக்குவான். அகத்தே சார்ந்த இருளைத் திருத்தொண்டர் புராணம் நீக்கும்.

## 4. தேசம் விளக்கிய தென்திசை

**தேசம் எல்லாம் விளக்கிய தென்திசை**
ஈசர் தோணி புரத்துடன் எங்கணும்
பூசனைக்குப் பொருந்தும் இடம் பல.
பேசில் **அத்திசை ஒவ்வா பிறதிசை.**

மாதவஞ் செய்த தென்திசை வாழ்ந்திட, தீதிலாத் திருத்தொண்டத் தொகை தரப் போதுவாராகிய சுந்தரர், இந்த வான்திசை எட்டினும் மேற்படுமாறு வந்த புண்ணியம் மிக்குளதாய தென்திசைக்கண் வந்த வரலாற்றைக் கூறும் உபமன்னிய முனிவர் அத்திசைப் பெருமையை விளக்குகிறார்.

அறிவாலும் ஒழுக்கத்தாலும் உலகத்தையே விளக்கம் செய்த பெருமை தென்திசைக்கே உண்டு. தேசு - ஒளி, தன்னிடம் வாழ்பவர்களுக்குப் புகழைத் தருவதும், தான் புகழ் பெறுமாறு தன்னிற் பிறந்தாரை வல்லமையுடையவர்களாக ஆக்குவதும் அமைந்த நாட்டைத் 'தேசம்' என்பது மரபு. இன்று புகழ் மிகுந்த நாடுகளாக விளங்கும் தேசங்களை விளக்கம் செய்த பெருமை தென்திசையையே சாரும் என்றார் சேக்கிழார்.

உலகத்திலேயே ஒழுக்கத்தில் சிறந்தது தொண்டை நாடு என்பார் சேக்கிழார். தமிழ் நாட்டுக்கு வந்த மார்கோ போலோ, ''மாபர் நாடு (தமிழ்நாடு) உலகிலேயே ஒழுக்கத்தில் சிறந்தது'' என எழுதியுள்ள குறிப்பைக் காண்க உலகினில் ஒழுக்கம் என்றும் உயர் பெருந் தொண்டைநாடு" சேக்கிழார் வாக்கு.

சீகாழிப் பதியையும் திருமுறைத் தோற்றத்தையும் உள்ளத்திற் கொண்ட சேக்கிழாரடிகள் தோணிபுரம் எனப்பெறும் சீகாழிப் பதியோடு எண்ணில்லாத இடங்கள்

பல இறைவனைப் பூசை செய்தற் கேற்ற வகையில் அமைந்துள்ளன.

புகழை நோக்கும் போது ஏனைத் திசைகளெல்லாம் தென்திசைக்கு ஈடாகா.

## 5. தென்திசைப் பதிகள்.

அரசுகொள் கடன்கள் ஆற்றி,
மிகுதி கொண்டு, அறங்கள் பேணிப்
பரவருங் கடவுள் போற்றி,
குரவரும் விருந்தும் பண்பின்
விரவிய கிளையும் தாங்கி,
விளங்கிய குடிகள் ஓங்கி
வரைபுரை மாடம் நீடி
**மலர்ந்துள்ள பதிகள்** எங்கும்.

தென்திசையில் உள்ள நகரங்களை அறிமுகப் படுத்துகிறார் சேக்கிழார்.

எழுதிக் காட்ட முடியாத, கற்பனையால் கருதிப்பார்க்க முடியாத, ஆனால் அநுபவத்தால், திருவருள் கொடுத்தால் நொடிப் பொழுதளவில் மெல்ல நுகர முடிவதே **மென்மை.** மென்மையை விளக்க எழுந்த பொருளே மலர். மென்மையும் விளக்கமும் அமைந்த நகரங்களைக் கொண்டது தென்திசை என்பதை **மலர்ந்துள பதிகள்** என்றார்.

மென்மையும் விளக்கமும் அமைந்த பெண்களை நகரங்களோடு ஒப்பிட்டுச் சொல்வது கவிமரபு.

அரசர்களின் ஆட்சித் திறமையால் சிறந்து விளங்கும் நகரங்கள் என்று கூறினாரில்லை;

1. அரசை வாழ்விக்கக் கூடிய கடமைகளாக என்னென்ன உள்ளதோ அவைகள் எல்லாவற்றையும் முயன்று செய்து தருதல்.

2. பொதுவாழ்வை மலரச் செய்ய வேண்டிய பொறுப்பை ஏற்றுள்ளது அரசு. அந்த அரசு செய்ய வேண்டிய கடமைகளுக்கு உரிய எல்லா வகையான ஆக்கத்தையும் செய்து தந்து, எஞ்சியவைகளைத் தன்வாழ்வுக்கென எடுத்துக் கொள்ளும் மாண்பமை குடிகள்.

3. அரசுக்குத் தந்தது போக எஞ்சிய பொருள் முதலியவற்றால் அறங்கள் பல நிகழ்த்துதல்.

4. கடவுளுக்கு விழா அமைத்து வழிபடல்.

5. சான்றோர், விருந்து, என்று சொல்லப் பெறும் சுற்றத்தாரைத் தாங்குதல்.

6. பண்பினால் விளங்கிய குடிகளின் வாழ்விடங்களும் மலையை ஒத்தனவாய் வலிமையும் உயர்வையும் கொண்டிருந்தன.

இவற்றால் **மலர்ந்துள பதிகள்.**

## 6. மாநிலங் காவலன்

''மாநிலங் காவலன் ஆவான்
 மன்னுயிர் காக்குங்காலை
தான் அதனுக்கு இடையூறு
 தன்னால் தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால்
 கள்வரால் உயிர் தம்மால்
ஆனபயம் ஐந்தும் தீர்த்து
 அறம் காப்பான் அல்லனோ: 6

## அரசனுவான் கடமைகள்

1. உயிர்களின் காவலை மேற் கொண்ட அரசன் உயிர்கள் ஆன்மநெறி வளர்ச்சி பெறுவதற்குத் தடையாக இருத்தல் ஆகாது.

2. உயிர்களின் வாழ்வைக் குலைப்பது அச்சம் ஒன்றே! நாமார்க்கும் குடியல்லோம் நமனை **அஞ்சோம்** என்ற நாவரசர் கூற்றை உன்னுக. 1 தன்னுலோ, 2 தன் பரிவாரங்களாலோ, 3 பகைவர்களாலோ, 4 கள்வர்களாலோ, 5 ஏனை விலங்கு முதலிய உயிர்களாலோ என்று இந்த ஐந்து வகையாலான அச்சம் வந்து உயிர்களைத் தாக்காத வண்ணம் காத்தல்.

3. அறவழியில் நின்று காத்தல்.

## 7. வீதியிலே ஈசனருள்

பொன் தயங்கு மதிலாரூர்ப்
 பூங்கோயில் அமர்ந்த பிரான்
**வென்றி** மனுனுக்கு வந்த
 **வீதியிலே அருள் கொடுத்துச்**
சென்றருளும் பெருங்கருணைத்
 திறங்கண்டு தன்னடியார்க்கு
**என்றும் எளிவரும் பெருமை**
 ஏழுலகும் எடுத்தேத்தும்.

திருவாரூர்க் கோயிலுக்குரிய பெயர் **பூங்கோயில்.** திருக்குள மும் கமலாலயம்.

பூங்கோயிலை நாடிச் சென்று இறைவனை வேண்டித் திருவருளைப் பெறவில்லை. ஆனுல் அவன் நின்ற வீதியிலே அருள் கொடுக்க ஓடிவந்தான் இறைவன்.

ஒரு குலத்துக்கு ஒரு மைந்தன் எனக் கருதாது அன்பு பொதிந்த அவன் மார்பின் மேல் அறத்தின் வடிவாய தேர்ச்சக்கரத்தைப் பொருந்து மாறு செலுத்தி, பாசத்தை அறத்தால் வென்ற காரணத்தால் '**வென்றி மனு**' எனப் பெற்ற மனுநீதிச் சோழன் 'தருமம் தன்வழிச் செல்கை கடன்' என்று கருதி நடந்தான்.

அவன் செய்கை கண்ட பெருமான் அவன் கடமையை ஆற்றிய அந்த இடத்திலேயே ஓடிவந்துஅருள் கொடுத்தான் **என்றும் எளிவரும் பெருமை.**

## 8. திருத்தொண்டர் இயல்பு

(அ) கேடும் ஆக்கமும் கெட்ட திருவினர்
ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவர்
கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி
வீடும் **வேண்டா** விறலின் விளங்கினர் (8)

(ஆ) ஆரம் கண்டிகை ஆடையுங் கந்தையே
பாரம் ஈசன் பணி அலது ஒன்றிலார்
ஈர அன்பினர் யாதுங் குறைவிலார்
வீரம் என்னால் விளம்புந் தகையதோ (9)

1. குறைதலோ மிகுதலோ இல்லாத செல்வமுடைய வர்: 'சென்றடையாத திருவுடையானை' என்பது திருமுறை வறுமையோ செல்வமோ இல்லாத நிலை.

2. மண்ணோட்டையும் பொன்னோட்டையும் ஒன்றென வே நினைத்தல், மண்ணோட்டைக் கண்டபோது வெறுப்பும் பொன்னோட்டைக் கண்டபோது விருப்பும் இல்லாத ஒரு நிலையுடையவர்.

3. பயன் கருதாது அன்பு முடியாகக் கொள்ளும் வழி பாட்டை உடையவர்.

4. வீட்டுலக வாழ்வாயினும் கேட்டுப் பெறுதலோ விரும்பி வாழ்தலோ இல்லை.

5. உருத்திராக்க மாலை உடையவர்.

6. ஆடையும் கிழிந்ததே. நுலாடையே யன்றித் தோலாடையும் (உடம்பு) கிழிந்ததே.

7. சுமையென ஏற்றுக் கொண்டது ஈசன் பணியையே ஈசன் வாழும் இடங்களை விளக்கம் செய்வதே பணி. திருக் கோயில்கள் மட்டுமல்ல. நடலை எனத் திரியும் நடமாடும் உயிர்களும் ஈசன் உறையும் இடங்களாகையால் அவைகளை யும் திருக்கோயில்களாக மாற்றும் பணியை மேற் கொள் வார்கள். மறைந்திருக்கும் மூர்த்தியை விளக்கமுறச் செய்து நடமாடும் பிணங்கள் எனப்பெறும் மக்களை நடமாடும் கோயில்களாக ஆக்குவதே அவர்கள் பணி

8. தடைபடாது ஓடும் அன்புடையவர்கள்

9. ஒரு குறைவும் இல்லாதவர். இவை வீரத்தின் இலக்கணம். இவைகளை உடையவர்கள் திருத்தொண்டர்கள்.

## 9. அர்ச்சனை பாட்டே யாகும்

மற்றுநீ வன்மை பேசி '**வன் தொண்டன்**' என்னும் நாமம்
பெற்றனை; நமக்கும் அன்பில் பெருகிய சிறப்பில் மிக்க
**அர்ச்சனை பாட்டே யாகும்** ஆதலால் மண்மேல் நம்மைச்
சொற்றமிழ் பாடுக'' என்றார் தூமறை பாடும் வாயார். **10**

அர்ச்சனை என்பது அருச்சனை என்பதன் திரிபு. அருத் தனையே அருச்சனை. அருத்தித்தல் - அன்புடன் துய்க்கச் செய்தல்.

முப்போதும் திருமேனி தீண்டிப் பூசிக்கும் முறையைப் பிறப்பால் பெற்ற சுந்தரரைப் பார்த்து, இறைவன், நீ நம்மை அருத்திப் பூசிக்கும் முறை சொற்றமிழ் புனைதலே என்றார்

சொற்றமிழாற் பாடுவதை அன்பிற் பெருகிய அர்ச்சனை என்றும் சிறப்பில் மிக்க அர்ச்சனை என்றும் இறைவனே அமைத்துக் கூறினார்.

நமக்கும் என்ற சொல்லில் உள்ள உம்மையானது விருப்பு வெறுப்பு, வேண்டுதல் வேண்டாமை இல்லாத எனக்கும் மகிழ்வைத் தருவது சொற்றமிழால் என்னை அருச்சிப்பது என்றார்.

சொல் - புகழ். சொல் தமிழ் - புகழ் மிக்க தமிழ் நம்மைப் பாடுக என்னுது நம்மைத் தமிழாற் பாடுக என்றான் இறைவன்.

தடுத்தாட் கொள்ளப் பெற்ற சுந்தரருக்கு இறைவன் இட்ட விருப்பப்பணி சொற்றமிழால் பாடுதலாகிய அருச்சனை செய்தல்.

## 10. மனித்தப் பிறவியே இன்பம் ஆவது

''ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள;
அளப்பருங் கரணங்கள் நான்கும்
சிந்தையே ஆக; குணம் ஒருமூன்றும்
திருந்து சாத்துவிகமே ஆக;
இந்துவாழ் சடையன் ஆடும் ஆனந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்;
வந்த பேரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார்'' 11

"தெண்ணிலா மலர்ந்த வேணியாய் உன்தன்
திருநடம் கும்பிடப் பெற்று
**மண்ணிலே வந்த பிறவியே எனக்கு
வாலிதாம் இன்பம் ஆம்**' என்று
கண்ணில் ஆனந்த அருவிநீர் சொரியக்
கைம்மலர் உச்சிமேல் குவித்துப்
பண்ணினல் நீடி அறிவரும் பதிகம்
பாடினுர் பரவினுர் பணிந்தார்" 12

சுந்தரர் பெருமான் தில்லையில் கூத்தப் பெருமானை வணங்கிய காட்சியை ஐந்து பேரறிவும் என்ற செய்யுள் விளக்குகிறது.

திருநடம் கும்பிடப் பெற்றபின் சுந்தரர் இறைவனிடம் கூறுவதாக உள்ள செய்யுளில் இம் மண்ணுலகப் பிறவியானது தூய்மையுடையது; இன்பம் அளிப்பது என விளக்குகின்ருர்.

இவ்வுலக வாழ்வு தேவையற்றது எனச் சாத்திரங் கூருமல் மனித்தப் பிறவியை மதித்து வாழுங்கள் என்று உலகவரை நோக்கி நாயன்மார்கள் கூறியுள்ளவைகளை நினைவு கொண்டு சுந்தரர் திருவாக்கையும் இணைத்துக் காண வேண்டும்.

1. "வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி
மதித்திடுமின்"

2, "மனித்தப் பிறவியும் வேண்டுவதே
இந்த மாநிலத்தே"

—அப்பரடிகள்

3. மண்ணில் நல்லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில் நல்ல கதிக்கு
யாதும் ஓர் குறைவு இலை'

—திருஞானசம்பந்தர்

மண்ணில் வந்த பிறவி தூய்மையுடையதாம் [வாலிது ஆம்] இன்பம் உடையது ஆம் எனச் சுந்தரர் அருளுகின்றார்.

## 11. இறைவன் வாக்கில் அடியார் சிறப்பு

"பெருமையால் எம்மை ஒப்பார்;
பேணலால் எம்மைப் பெற்றார்
ஒருமையால் உலகை வெல்வார்;
ஊனம்மேல் ஒன்றும் இல்லார்
அருமையாம் நிலையில் நின்றார்;
அன்பினால் இன்பம் ஆர்வார்
இருமையும் கடந்து நின்றார்;
இவரை நீ அடைவாய் என்று 13

திருவாரூர்த் தேவாசிரிய மண்டபத்தே அமர்ந்துள்ள அடியவர்களை வணங்குக என்று சுந்தரரை ஆற்றுப் படுத்திய இறைவன் அவ்வடியார்களின் பெருமைகளைத் தம் மறை பொழிந்த திருவாக்கினாலேயே எடுத்து விளக்குகிறான்.

1. தம்மை[இறைவனை]ஒத்தபெருமையுடையவர்கள்.

2. இடையறாது தியானித்தலால் இறைவனையே தொண்டனாகப் பெற்றவர்கள்.

3. பலவாகக் காணப்படும் இவ்வுலக ஆசைகளை ஒருமைக் காட்சியால் வென்றவர்கள். 'ஒருமை மகளிரேபோல' என்ற திருக்குறளுரையை நோக்குக.

4. மறுபிறவி முதலிய துன்பத் தொடக்கு இல்லாதவர்கள்.

5. பாரம் ஈசன்பணி எனக்கொண்டு, மக்களை நடமாடுங் கோயில்களாக மாற்றும் பணியில் இடையறாது உழைப்பதால் அருமையாம் நிலையில் நின்றவர்கள்.

6. பிறவுயிர்களுக்கு அன்பு காட்டுவதன்மூலம் இன்பம் துய்ப்பவர்கள்.

7. வேண்டுதல் வேண்டாமை இல்லாதவன் இறைவன்; இவர்களோ வேண்டுதல் வேண்டாமைகளைக் கடந்து நின்றவர்கள்.

## 12. தில்லைக் கூத்தன் வாழ்த்து

ஆதியாய் நடுவும் ஆதி
அளவிலா அளவும் ஆகி
சோதியாய் உணர்வும் ஆகித்
தோன்றிய பொருளும் ஆகி
பேதியா ஏகம் ஆகிப்
பெண்ணுமாய் ஆணும் ஆகிப்
போதியா நிற்கும் தில்லைப்
பொது நடம் போற்றி! போற்றி! 14
கற்பனை கடந்த சோதி
கருணையே உருவம் ஆகி
அற்புதக் கோலம் நீடி
அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பர வியோமம் ஆகும்
திருச்சிற்றம் பலத்துள் நின்று
பொற்புடன் நடம்செய் கின்ற
பூங்கழல் போற்றி! போற்றி! 15

## 13. மனத்தினும் தீண்டா மாண்பு

ஆதியார் நீலகண்டத்து
அளவு தாம் கொண்ட ஆர்வம்
பேதியா ஆணை கேட்ட
பெரியவர் பெயர்ந்து நீங்கி

ஏதிலார் போல நோக்கி
**''எம்மை என்றதனுல் மற்றை**
**மாதரார் தமையும் என்தன்**
**மனத்தினும் தீண்டேன்''** என்ருர். 16

'தில்லைவாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்' என்று இறைவன் தொடங்கி முடித்தவுடன், சுந்தரர் வாக்கில் முதன்மை பெற்று வெளிவருந் தொண்டர் 'திருநீலகண்டர்'. பிற அடியவர்களைக் குறிப்பிடாமல் திருநீலகண்டரைக் குறிப்பிடும் நெறிக்குக் காரணம் என்ன?

ஒருமை உணர்வே கற்பு நெறி. திருநீலகண்டம் என அடிக்கடி எடுத்துக் கூறும் நாயனுர், திருநீலகண்டத்தைச் சொல்லளவில் ஆக்கி, ஏனைப் புறப் பொருள்களிலும் அன்பு வைக்கிருர். இதுவே பரத்தைமை.

'களவு' என்ற ஒன்றை அடிப்படையாகக் கொண்டு இவர் வாழ்வில் இறைவன் குறுக்கிடுகிருர். அடியவர் களுக்கு ஓடு கொடுத்தல் என்ற தொண்டில் தவருது நின்ருர் என்றமையால் இவர் அடியவர் ஆனுரா? அல்லது கற்பின் மனைவியாரைத் தீண்டாமையே யன்றி மற்றை மாதரார் தமையும் மனத்தினும் தீண்டாமையும், தீண் டாமை அயலறியாது வாழ்ந்தமையும் காரணமாக இவர் அடியவர் ஆனுரா? என்பனவும் உளங்கொள வேண்டும்.

பெண்மை மட்டுமன்றி, காதலை விளைவிக்கும் எப்பொரு ளாயினும் அது 'மாதர்' என்ற சொல்லாற் குறிக்கப்பெறும் தன்மை பெற்றது. திருநீலகண்டத்தைத் தவிர பிற எப் பொருளை விரும்பினும் அது களவு தான். அது பரத்தை மைதான்.

மற்றை நம் காமங்கள் மாற்று என்ருற்போல 'திருநீல கண்டம்' என்ற சொல்லையும் பொருளையும் அனுபவமாக

ஆக்குவது தவிர வேறு எப்பொருளையும்—மற்றை மாதரார் தமையும் மனத்தாலும் தீண்டேன் என்றார்.

''வளத்தினால் மிக்க ஓடு வௌவினேன் அல்லேன் ஒல்லை **உளத்தினும்** களவு இலாமைக்கு என்செய்கேன் உரையும்'' என்று திருநீலகண்ட நாயனார் கூறுவதன் நுட்பம் நோக்குக.

மனைவியையன்றி மற்றைப் பெண்களையும் உடலாலல்ல, மனத்தாலும் தீண்டேன் என்பது பொதுவுரை.

இக் கருத்தை உன்னியே சேக்கிழாரடிகள், '**சேணிடையும் தீங்கடையாத் திருத்தொண்டர்**' எனத் திருநீலகண்ட நாயனாரைக் குறிப்பிடுவாராயினர்.

## 14. திருவினும் பெரியாள் ஆம் திறம்

இன்றுநீர் எனக்கு அருள்செய்தது இதுவேல்
என் உயிர்க்கு ஒரு நாத! **நீர்உரைத்தது
ஒன்றை நான்செயும் அத்தனையல்லால்
உரிமை வேறு உளதோ எனக்கு** என்று
தன்தனிப் பெருங் கணவரை வணங்கத்
தாழ்ந்து தொண்டனார் தாம் எதிர் வணங்க,
சென்று மாதவன் சேவடி பணிந்து
திகைத்து நின்றனள் **திருவினும் பெரியாள்**

இயற்பகை நாயனாரின் மனைவியார் திறம் பேசுகிறார் சேக்கிழார்.

''இன்று உனை இம்மெய்த்தவர்க்கு நான் கொடுத்தனன்'' என்ற வார்த்தையைக் கேட்ட பின்னர், என் உயிர்க்கு ஒரு நாத! என இயற்பகை நாயனாரை அழைக்கும் அம்மையார், தாங்கள் கூறியதைச் செய்வதே கடமை என்று அமைகிறார்.

உரிமை வேறு உளதோ என்ற போது, பெண் உரிமை கொடுக்கப் பெறவில்லை என்பது பொருளன்று. இக்கருத்தை விளக்குவதே **திருவினும் பெரியாள்** என்ற தொடர்.

இயற்பகை நாயனுர் தொண்டு, மனைவியைக் கொடுத்த அவ்வளவில் நிறைவு பெற்று விடுகிறது. ஆனுல் அவருடைய சொல்லையும் செயலையும் பழுதுபடாமைக்கு காத்த பெருமை அவர் மனைவிக்குண்டு ஆதலின் திருவினும் பெரியாள் என்ருர்.

இலக்குமியை மனைவியாகக் கொண்ட திருமால் மாவலியிடம் பிச்சை கேட்கச் சென்ருர். அப்போது இலக்குமி இவர் மேற்கொண்ட செயல் மாவலி இல்லை என்று சொல்லி விட்டால் தடைப்பட்டு விடுமே — புகழ் அழியுமே என்று தானும் உடன் சென்று தம் பார்வையால் (லட்சுமிகடாக்ஷம்) மாவலியை நோக்கினுள். இது திருவின் செயல்.

இயற்பகையின் சொல்லைச் செயற்படுத்த வேண்டிய நிலைமையைச் செய்தாலே அவரைச் செல்வமுடையராக்கிய பெருமை அமைகிறது. இயற்பகை வாக்குப் பொய்க்காது என்ற நிலைமையை — செல்வத்தை — புகழை அமைத்துக் கொடுத்தார் மனைவியார்.

இயற்பகையைச் செல்வராக ஆக்கிய பெருமையால் திருவினும் பெரியாள் ஆனுர்.

சொல்லுவது அறியேன் வாழி
　　தோற்றிய தோற்றம் போற்றி
வல்லை வந்தருளி என்னை
　　வழித்தொண்டு கொண்டாய் போற்றி
எல்லைஇல் இன்ப வெள்ளம்
　　எனக்கருள் செய்தாய் போற்றி
தில்லை அம்பலத்துள் ஆடும்
　　சேவடி போற்றி என்ன.　18

## 15. அடியரை வழிபடும்முறை

ஆரம் என்பு புனைந்த ஐயர்தம்
அன்பர் என்பதொர் தன்மையால்
நேர வந்தவர் யாவ ராயினும்
நித்தமாகிய பத்தி முன்
கூர வந்து எதிர்கொண்டு கைகள்
குவித்துநின்று செவிப்புலத்து
ஈரமென் மதுரப்பதம் பரிவு
எய்த முன்னுரை செய்தபின் 19

கொண்டு வந்து மனைப்புகுந்து
குலாவு பாதம் விளக்கியே
மண்டு காதலின் ஆசனத்து இடை
வைத்து அருச்சனை செய்தபின்
உண்டி நாலு விதத்தில் ஆறு
சுவைத்திறத்தில் ஒப்புஇலா
அண்டர் நாயகர் தொண்டர் இச்சையில்
அமுது செய்ய அளித்துளார். 20

## 16. "தத்தா! நமர்" என்ற தத்துவம்

மறைத்து அவன் புகுந்த போதே
மனம் அங்கு வைத்த தத்தன்
இறைப் பொழுதின்கண் கூடி
வாளினால் எறிய லுற்றான்
நிறைத்த செங்குருதி சோர
வீழ்கின்றார் நீண்ட கையால்
தறைப்படும் அளவில் "தத்தா!
நமர்" எனத் தடுத்து வீழ்ந்தார். 21

மெய்யெல்லாம் திருநீறு பூசி, வேணிகள் முடித்துக்கட்டி வந்த முத்தநாதன், மை பொதி விளக்கே என்ன மனத்தி

னுள் கறுப்பு வைத்து, தான் நினைந்த அப்பரிசைச் செய்ய, கண்டிருந்த தத்தன், முத்தநாதனைக் கொல்லுவதற்கு வாளை எறிய முற்படும்போது 'தத்தா! நமர்' என்ருர்.

மெய்த்தவ வேடமே மெய்ப்பொருள் என்பது தத்துவம்; திருநீறணிந்த வேடமே 'நமர்' எனக் கொள்ளுதற்கு உரிய மூலம்.

மலிந்தவர் வேடமும்......அரன் எனத்தொழும் என்பது மெய்கண்டார் வாக்கு.

## 17. உரிமை அன்பு-இலக்கணம்

ஞாலம் உய்ய நாம் உய்ய
நம்பி சைவ நன்னெறியின்
சீலம் உய்ய திருத்தொண்டத்
தொகை முன் பாட, செழுமறைகள்
ஓலம் இடவும் உணர்வரியார்
**'அடியார் உடன்'** ஆம் உளது என்ருல்
ஆலம் அமுது செய்தபிரான்
அடியார் பெருமை அறிந்தார் ஆர்! 22

'உரிமை அன்பு' என்பதன் இலக்கணத்தைச் சேக்கிழார் அடிகள் இங்கே விளக்கிக் காட்டுகிருர்.

நம்பியாரூரர் திருத்தொண்டர்த் தொகை பாடுவதற்கு முன்னே அவரையும் சிவபெருமானையும் அடியவர் கூட்டத்துக்குப் **''புறம்பு''** என்று சொல்லவும், நம்பியாரூரர் திருத்தொண்டத் தொகை பாடியபின் அவரையும் சிவபெருமானையும் **''அடியாருடன்''** என்று சொல்லவும் உரிய தகுதியைப் பெற்றவர் விறன்மிண்ட நாயனர்.

தவற்றைக் கண்டிக்கவும் திருத்தத்தை ஏற்கவும் அமைந்த உள்ளத்து உறவாம் கிழமைப் பண்பே உரிமை அன்பு.

## 18. தொண்டின் பெருமை-துலை ஒத்தல்

"'இழைத்த அன்பினில் இறை திரு நீற்று **மெய்யடிமை**
**பிழைத்திலோம்** எனில் பெருந்துலை நேர் நிற்க'' என்று
மழைத்தடம் பொழில் திருநல்லூர் இறைவரை வணங்கித்
தழைத்த அஞ்செழுந்து ஓதினர் ஏறினர் தட்டில் 23

மண்டு காதலின் மற்றவர் மகிழ்ந்து உடன் ஏற
அண்டர் தம்பிரான் திரு அரைக் கோவணம் அதுவும்
கொண்ட அன்பினில் குறைபாடா அடியவர் அடிமைத்
தொண்டும் ஒத்தலால் ஒத்துநேர் நின்றது அத்துலைதான். 24

அடியவர்களுக்குக் கோவணம் தரும் தொண்டு அமர் நீதி நாயனருடையது. சிவனடியார் ஒருவர் தன்னுடைய கோவணத்தைப் பாதுகாத்துக் கொடுக்கச் சொன்னர். கோவணம் கெட்டு விட்டது. மீண்டு வந்த சிவனடியார் தன்னிடம் உள்ள வேறு ஒரு கோவணத்துக்கு நேராக எடையுள்ள ஒரு கோவணம் கேட்கிறார்.

தராசுத் தட்டில் ஒரு பக்கம் கோவணம், இன்னெரு பக்கத்துத் தட்டில் அமர்நீதி நாயனரின் செல்வம் எல்லாம் வைக்கப் பெற்றது. தானும் தன் மனைவியாரும் ஏறி விட்டனர். துலை நேர் நின்றது எதனுல்?

சிவனடியார்களுக்குச் செய்த அடிமைத் தொண்டு-திருத் தொண்டு தான் துலைத்தட்டைத் நேர் நிற்கச் செய்தது.

திருத் தொண்டின் நெறி வாழ்க!

## 19. உலகமன்னன் ஆதற்கு இலக்கணம்

குழையணி காதினனுக்கு அன்பராங்
**குணத்தின் மிக்கார்**
**பிழைபடின் அன்றிக் கொல்லார்**
**பிழைத்தது உண்டு** என்று உட் கொண்டு

மழைமத யானைசேனை
வரவினை மாற்றி மற்ற
உழைவயப் புரவி மேல் நின்று
இழிந்தனன் உலக மன்னன் 25

பட்டத்து யானை கொல்லப் பட்டது என்பதைக் கேட்டவுடன் படையுடன் புறப்பட்டு வருகிறுன் மன்னன். இறந்து கிடக்கும் யானை முன் நின்ற சிவனடியாரே இச் செயல் செய்தார் என்று கூறப் பெறுகிறது. அப்போது அவன் ''தவறு நடைபெற்றிருந்தாலல்லாமல் சிவனடியார் இச் செயல் செய்யார்; இச்செயல் நடைபெற்றது என்றுல் தவறு நடந்திருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வருகிறுன் மன்னன்.

அடியவராகிய தாங்கள் இந்த அளவுக்குச் சினங் கொள்ளக் கூடிய செயல் நடைபெற்றதற்கு யானே பிழையுடையன், ஐயகோ கெட்டேன் என வருந்திக் கதறினுன்.

எத்தகைய விசாரணையும் இன்றி, நீதியின் பெருமையையும் சிவனடியார் பெருமையையும் நிலைநிறுத்தினுனுதலின் அவன் சேக்கிழார் திருவாக்கால் 'உலகமன்னன்' ஆகிறுன்.

## 20. மெய்யுணர்வும் குற்றங்களும்

தலைப்பட்டார் எல்லாரும் தனிவீரர் வாளில்
கொலைப்பட்டார் முட்டாதார் கொல்களத்தை விட்டு
நிலைப்பட்ட மெய்யுணர்வு நேர்பட்ட போதில்
அலைப்பட்ட ஆர்வமுதற் குற்றம் போல் ஆயினுர் 26

போர்க்களத்துக்கு ஏனுதிநாத நாயனுர் வந்ததும் நேர் நிற்றவர் கொல்லப்பட்டனர்; நேர் நிற்கத் துணியாதவர் ஓடினர். அவர்கள் போர்க்களத்தை விட்டு ஓடியதை உவமை காட்டி விளக்குகிறது இச் செய்யுள்.

மனிதன் தவறு செய்யக் காரணம் அறிவின்மை சிறிதும் அசைதல் இல்லாத உண்மை அறிவு அவனிடம் அமைந்து, அவன் அதன் மூலம் ஒரு செயலை நோக்குவானா னால் தவறு நிகழாது.

மெய்யறிவு நேர் நிற்கும் போது தவறுகள் தாமே ஒழி மறையும். காமம், வெகுளி, மயக்கங்கள் என்பவையும் மெய்யறிவு இருக்குமேல் செயற்பட மாட்டா.

## 21. அடியவருக்கு நேர்நின்ற அரசர்

கைவாள் உடன் பலகை நீக்க, கருதியது
செய்யார் ''**நிராயுதரைக் கொன்றார் எனும் தீமை
எய்தாமை வேண்டும் இவர்க்கு**'' என்று இரும்பலகை
நெய்வாள் உடன் அடர்த்து நேர்வார்போல்
**நேர்நின்றார்** 27

அதிசூரன் ஏனாதிநாதரைத் தனிப் போருக்கழைத்தான். வஞ்சகமாகத் திருநீறுபூசி, அதைக் கேடகத்தால் மறைத் துக் கொண்டு போர் செய்யும் அதிசூரன், கேடகத்தைச் சிறிதே விலக்க, அவன் பூசிய திருநீற்றைக் கண்ட ஏனாதி நாதர், ஐயகோ கெட்டேன். இவர் சிவனடியராயிற்றே என்று கதறி, 'இவர் கொள்கைக்குறி வழி நிற்பேன்' என முடிவு செய்கிறார். ஆனால் அதைச் செய்யவில்லை; உடனே அதிசூரனை எதிர்ப்பதுபோல் எதிர்நிற்கின்றார்; ஏன்?

சிவனடியார், ஏவல் வழி நிற்பேன் என எண்ணி, வாள் முதலியவைகளை எறிந்து விட்டு, அதிசூரனை வணங்கி நின்றாரானால் அதிசூரன் வாளால் எறிவான்: வெற்றி அதிசூரனுக்குக் கிடைக்கும். ஆனால், நிராயுதரைக் கொன்றான் என்ற பழி அதிசூரனுக்கு வரும். அது வந்து விடக் கூடாதே என்று, வாள் முதலியவைகளைக் கையி

லெடுத்துக் கொண்டு அதிசூரனை எதிர்ப்பது போலவே நின்றார்.

**நேர்வார் போல் நேர்நின்றார்** என்பது சேக்கிழார் வாக்கு.

## 22. அன்பின் பிழம்பு

முன்பு திருக்காளத்தி முதல்வனார்
அருள் நோக்கால்
இன்புறு வேதகத்து இரும்பு
பொன்ஆனாற்போல் யாக்கைத்
தன்பரிசும் வினை இரண்டும்
சாரும் மலம் மூன்றும் அற
**அன்பு பிழம்பாய்த்** திரிவார்
அவர் கருத்தின் அளவினரோ: 28

கண்ணப்பர் ஆம் பரிசு பெறும் திண்ணனார் திருக்காளத்தியப்பரை வழிபடும் முறையையும் அவர் அன்புப் பிழம்பாய்த் திரியும் நிலையையும் இச்செய்யுள் கூறுகின்றது.

இரச குளிகையால் இரும்பு பொன்னாகிறது. அது போலத் திண்ணனார் அன்புப் பிழம்பானார். அவர் உடம்பில் உள்ள பூத சம்பந்தமான நிலைகள் மாறுகின்றன.

காளத்தியப்பர் திருவருள் நோக்கத்தால் திண்ணனாரிடம் விளைந்த பரிசு இது. திண்ணனார் செயல்கள் புண்ணியப் பாவம் என்ற பயன்களாக அமையாவாயின; ஆணவம் கன்மம் மாயை என்ற மூன்று மலங்களும் முழுமையாக அழிந்தன. இந்நிலையில் அன்பே வடிவானார்.

''**அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பு என்றும்
அவனுடைய அறிவெல்லாம் நமை அறியும் அறிவு என்றும்
அவனுடைய செயலெல்லாம் நமக்கு இனியவாம் என்றும்
அவனுடையநிலை இவ்வாறு அறி நீ**'என்று அருள்செய்தார். 29

அறிந்த நெறிப் பூசனை திண்ணனாருடையது; ஆகம நெறிப் பூசை சிவாச்சாரியாருடையது. திண்ணனார் என்றொருவர் பூசை செய்கிறார் என்பதை அறியாத சிவாசாரியார் இங்கே இவ்வாறு அசுத்தம் செய்கிறார்களே'' என்று வருந்தினார். அவருடைய கனவில் இறைவன் தோன்றி, திண்ணனாரின் நிலை இப்படிப்பட்டது என அருளிச் செய்கிறார்:

வடிவு ஒரு பருப் பொருள். அன்பு என்பது நுண் பொருள்; குணம். பருப் பொருளை நுண் பொருள் ஆக அமைத்துக் கூறும் நுட்பம் ஆராயத் தக்கது.

செங்கண் வெள்விடையின் பாகர்
  திண்ணனார் தம்மை ஆண்ட
அங்கணர், திருக்காளத்தி
  அற்புதத் திருக்கை அன்பர்
தம் கண் முன் கிடக்கும் கையைத்
  தடுக்க மூன்று அடுக்கு நாக
கங்கணர் அமுத வாக்குக்
  '**கண்ணப்ப நிற்க**' என்ற. 30

நெற்றியிலும் ஒரு கண் பெற்று முக்கண்ணராக அமைந்த சிவபெருமானுடைய கண்ணில் தம்முடைய கண்ணைத் தோண்டி அப்புவதற்காக, இறைவன் திருக்கண் உள்ள இடத்தில் தன்னுடைய இடது காலை ஊன்றி, உள்ளம் நிறை காதலோடு, ஒரு அம்பை எடுத்துத் தன் கண்ணில் வைத்துத் தோண்ட முற்பட்டபோது, அது தரிக்க மாட்டாதவராகிய தேவதேவர், கண்ணைத் தோண்ட முற்படுகின்ற திண்ணனார் கைகளைத் தம் கைகளால் தடுத்து, தம் வாக்கினால் 'கண்ணப்ப நிற்க' என மூன்று முறை மொழிந்தார்.

## 23. நிமிர்த்திய நேசம்

**நண்ணிய ஒருமை அன்பின் நார்உறு பாசத்தாலே**
**திண்ணிய தொண்டர் பூட்டி இளைத்தபின் திறம்பி நிற்க**
**ஒண்ணுமோ** கலயனார் தம் **ஒருப்பாடு** கண்ட போதே
அண்ணலார் நேரே நின்றார் அமரரும் விசும்பில்
ஆர்த்தார் 31

இறைவனுக்குக் குங்குலியப் புகை ஊட்டும் தொண்டி னில் வெற்றி பெற்ற கலயர் திருப்பனந்தாளுக்கு வருகிறார். திருக்கோயில் இலிங்கம் சாய்ந்து காணப்படுகிறது. சாய் வினை நிமிர்த்த மன்னன் பட்ட பாடெல்லாம் பாழாயின. குங்குலியக் கலயர் இலிங்கத்தைக் கட்டிய கயிற்றைத் தன் கழுத்தில் மாட்டி இழுக்கவும் நிமிர்ந்து விடுகிறது.

மற்றவர்கள் உடற் பலத்தைப் பணயமாக வைத்து இழுக்க, கலயனார் **'நண்ணிய ஒருமை அன்பு'** என்ற நாரால் இழுத்தார்; அன்பின் ஒருமைப்பாடே சாய்ந்த இலிங்கத்தை நிமிர வைத்தது.

## 24. "பொருள் செய்து ஆம் எனப் பெற்றேன்"

அருள் செய்த மொழி கேளா
அடற் சுரிகை தனை உருவிப்
**"பொருள் செய்து ஆம் எனப் பெற்றேன்"**
எனக் கொண்டு பூங்கொடி தன்
இருள் செய்த கருங்கூந்தல்
அடியில் அரிந்து எதிர்நின்ற
மருள் செய்த பிறப்பு அறுப்பார்
மலர்க் கரத்தினிடை நீட்ட. 32

மகள் திருமணத்தின்போது, மானக்கஞ்சாற நாயனார் இல்லத்துக்கு வருகிறார் சிவனடியார் ஒருவர். மஞ்சு

தழைத்ததென அந்தமணப் பெண் தலையில் தழைத்து வளர்ந்துள்ள கூந்தலைத் தன் பஞ்சவடிக்கு வேண்டும் எனக் கேட்கிறார். பஞ்சவடி-மயிரால் செய்யப் பெற்று மார்பிலே பூணூலாக அணியப்பெறும் வடம்.

அம்மொழி கேட்ட மானக்கஞ்சாறர் உள்ளத்தின் பண்பை விளக்குகிறார் சேக்கிழார். ஒன்றற்கும் பற்றாத என்னையும் நன்கு மதிக்கற்பாட்டிற்குரிய பொருளாக எண்ணினார், அது மட்டுமன்றி இவள் தலையில் இருட்டை உண்டாக்கிக் கொண்டிருக்கிற இம் மயிர்க் கற்றையையும் ஒரு பொருளாக மதித்து, **'இது நமக்கு ஆம்'** என்று சொல்ல, அத்தகைய பேற்றைப் பெற்றேமே என்று மகிழ்ந்து, மகள் கூந்தலை அரிந்து கொடுத்தார்.

## 25. ஆனாயர் குழலோசை

**மெய்யன்மர் மனத்து அன்பின்**
**விளைந்த இசைக் குழலோசை**
வையந் தன்னையும் நிறைத்து
வானம் தன்வயம் ஆக்கி
பொய்யன்புக்கு எட்டாத
பொன் பொதுவில் நடம்புரியும்
ஐயன்தன் திருச்செவியின்
அருகு அணையப் பெருகியதால் 38

## 26. யார் தடுக்க வல்லார் ?

அந்தம் இலவாம் மிறை செய்யவும் அன்பனார் தாம்
முந்தை முறைமைப் பணி முட்டலர்; செய்து வந்தார்
**தந்தம் பெருமைக்கு அளவாகிய சார்பில் நிற்கும்**
**எந்தம் பெருமக்களை யாவர் தடுக்க வல்லார் ?**

திருக்கோயில் நாட்பூசைக்கு உரிய பொருள்களைப் பொதுமக்கள் தாமே மனமுவந்து ஏற்று, தயாரித்துக் கொடுக்கும் பொறுப்பை மேற்கொண்டிருந்தார்கள் என்பதைப் பெரிய புராண வரலாற்ருல் அறியலாம். குங்குலியப் புகை கொடுத்தார் கலயர். மூர்த்திநாயனுர் சந்தனம் கொடுக்கும் பணியை மேற்கொண்டார்.

அரசன் சமண் சார்ந்தமையால், சந்தனக்கட்டை கிடைக்க முடியாதவாறு தடைசெய்தான். இந்நிலையில் எழுந்த சேக்கிழார் திருவாக்கை உன்னுக.

'எந்தம் பெருமக்கள்' என உரிமையோடு கூறுகிருர். எந்தம் பெருமக்களை யாவர் தடுக்க வல்லார்? ஏன்? தங்கள் தங்களுக்குரிய பெருமைக்கு ஏற்ற பண்பையுடையவர்கள். ஏதேதோ காரணத்தைச் சொல்லி இற்றைநாள் திருப்பணித் தடைகளை மேற்கொள்ளுகிறவர்கள் இச் சேக்கிழார் திருவாக்கை உன்னுக.

வரலாற்றுக் கண்கொண்டு நோக்கினுல் சமணம் முதலிய பிற சமயத்தைச் சார்ந்தவர்கள் திருக்கோயில் திருப்பணி; நாட்பூசை நிகழ்ச்சிகள் ஆகியவற்றைத் தடைசெய்வதையே நோக்கமாகக் கொண்டிருந்தார்கள் என்பதும் புலப்படும்.

## 26. நிறைமொழி

''புன்மைச் செயல் வல்லமண்
குண்டரிற் போது போக்கும்
வன்மைக் கொடும் பாதகன்
மாய்ந்திட வாய்மை வேத
நன்மைத் திருநீற்று உயர்
நன்னெறி தாங்கும் மேன்மைத்
தன்மைப் புவி மன்னரைச்
சார்வது என்று ?'' என்று சார்வார்.'' 35

திருநீற்றில் பற்று இல்லாத தலைவர்களிடம் பணியாற்ற வேண்டிய இக்கட்டான நிலையில் இருந்து துன்புறுகின்றவர்கள் இச்சேக்கிழார் வாக்கை நாடோறும்பாராயணம்செய்க! இது மந்திரப் பாடல்,

## 27. முடிசூட்டு முறை

''வையம் முறை செய்குவனுகில் வயங்கு நீறே
செய்யும் அபிடேகமு மாக, செழுங்கலன்கள்
ஐயன் அடையாளமு மாக, அணிந்து தாங்கும்
மொய்புன் சடைமா முடியே முடியாவது.'' என்றுர் 36

முடிசூட்டு அபிடேகமாக அமையவேண்டுவது திருநீறே; சடைமுடியே அரச மகுடம்; உருத்திராக்கமே அணிகலன்கள்.

## ஆட்சிமுறை

குலவுந்துறை நீதி அமைச்சர் குறிப்பின் வைக
கலகஞ்செய் அமண் செயலாயின கட்டு நீங்கி
நிலவும் திருநீற்று நெறித்துறை நீடுவாழ
உலகெங்கும் நிரம்பிய சைவம் உயர்ந்து மன்ன 37

நூதலின்கண் விழித்தவர் வாய்மை நுணங்கு நூலின்
பதம் எங்கும் நிறைந்து விளங்க பவங்கள் மாற
உதவும் திருநீறு உயர்கண்டிகை கொண்ட வேணி
முதன் மும்மையினுல் உலகாண்டனர் மூர்த்தியார் தாம் 38

சைவத் திருமுறைகளிற் காணப்பெறும் சில வாக்கியங்கள் அங்கங்கே எழுதப் பெற்றிருக்க வேண்டும்; செயற்படுத்தப்பெற வேண்டும்.

மும்மை—திருநீறு, உருத்திராக்கம், சடைமுடி.

திருநீறு மனத்தூய்மைக்கும், உருத்திராக்கம் கண்ணோட்டத்துக்கும், சடைமுடி ஒருமை ஞானத்துக்கும் அறி குறிகள்.

## 28. திருப்பள்ளித் தாமத் தொண்டு

வைகறை உணர்ந்து போந்து புனல்மூழ்கி வாயுங் கட்டி
மொய்ம்மலர் நெருங்கு வாச நந்தன வனத்து முன்னிக்
கையினில் தெரிந்து நல்ல கமழ்முகை அலரும் வேலைத்
தெய்வ நாயகர்க்குச் சாத்தும் **திருப்பள்ளித் தாமம்**
கொய்து-39

கோட்டு மலரும் நிலமலரும்
குளிர்நீர் மலரும் கொழுங்கொடியின்
தோட்டு மலரும் மாமலரும்
சுருதி மலரும் திருவாயில்
காட்டு முறுவல் நிலவலரக்
கனக வரையின் பன்னக நாண்
பூட்டும் ஒருவர் திருமுடிமேல்
புனையலாகும் மலர் தெரிந்து 40

கொண்டு வந்து தனியிடத்தின்
இருந்து கோக்கும் கோவைகளும்
இண்டைச் சுருக்கும் தாமமுடன்
இணைக்கும் வாச மாலைகளும்
தண்டில் கட்டும் கண்ணிகளும்
தாளிற் பிணைக்கும் பிணையல்களும்
நுண்தாது இறைக்கும் தொடையல்களும்
சமைத்து நுடங்கு நூன்மார்பர்'' 41

## 29. திருநாளைப் போவாராம் மறைமுனிவர்

திருவுடைய தில்லைவாழ் அந்தணர்கள் கைதொழுதார்
பரவரிய தொண்டர்களும் பணிந்து மனம் களிபயின்றார்
அருமறைசூழ் திருமன்றில் ஆடுகின்ற கழல் வணங்க
வருகின்றார் **திருநாளைப் போவாராம் மறைமுனிவர்** 42

தில்லைக்கு நாளைப் போவேன். நாளைப் போவேன் என்று சொல்லும் வழக்கம் கொண்டிருந்தார் ஆதலின் திருநாளைப் போவார் என்ற பெயர் நந்தனாருக்கு உண்டு.

இறை ஆணையின் வண்ணம் ஏற்படுத்தப் பெற்ற எரியில் மூழ்கி வெளிவந்ததும் செம்மலர்மேல் வந்தெழுந்த அந்தணன் போல் தோன்றினார். அவர் தீப்புகுவானேன் என்று வினவுவார் உளர்.

இன்னல் தரும் இழிபிறவி இதுதடைஎனப்பன்முறையும் திருநாளைப் போவார் வருந்துவராகலின் அவர் உள்ளத்தில் அமைந்த இழிவை நீக்கியே முத்தி கொடுக்க வேண்டியிருந்தலின் எரியிடைப் புகுதல் நிகழ்ந்தது.

## 30. திருக் குறிப்புத் தொண்டு

மண்ணின்மிசை வந்ததற்பின்
மனம் முதலாயின மூன்றும்
அண்ணலார் சேவடியின்
சார்வாக அணைவிப்பார்
புண்ணிய மெய்த் தொண்டர் திருக்
குறிப்பறிந்து போற்றும் நிலைத்
திண்மையினால் **திருக் குறிப்புத்**
**தொண்டர்** எனுஞ் சிறப்பினார் 43

பிறவியால் ஏகாலிக் குலத்தவராக இருந்தும் பிற நாயன்மார் பெருத சிறப்புப் பெயரைப் பெற்றவர் இவர். மனம் மொழி வாக்கு ஆய மூன்றையும் இறைவன் திருவடிகளுக்கு ஒப்படைத்த இவர், சிவனடியார்களின் உள்ளக் குறிப்பை அறிந்து தொண்டாற்றும் நிலை பெற்றவர்.

ஏகாலிக் குலத்துக்குக் காலக் குறிப்பு அறிதல் மரபு வழிப் பேறு. அக்குறிப் போடு அடியவர் உள்ளக் குறிப்பையும் அறிந்து தொண்டு செய்தார். காலக் கணிப்பை மாற்றியே இவரை ஆட் கொண்டான் இறைவன்.

## 31. அடியார் செய்தனவே தவம்

வந்து மிகை செய் தாதை தாள்
  மழுவால் துணித்த மறைச்சிறுவர்
அந்த உடம்பு தன்னுடனே
  **அரனுர் மகனுர்** ஆயினுர்
இந்த நிலைமை அறிந்தார் ஆர்?
  ஈறிலாதார் தமக்கு அன்பு
தந்த **அடியார் செய்தனவே**
  **தவமாம்** அன்றே சாற்றுங்கால் 44

ஞாலம் அறியப் பிழை புரிந்தார் என்று சொல்லப் பெறும் பத்தி முதிர்ந்த பாலகனுர். ''அனைத்தும் நாம் உண்ட கலமும் உடுப்பனவும் சூடுவனவும் உனக்கேயாக; சண்டீசனும் ஆம் பதந் தந்தோம்'' என்று கூறி இறைவனுல் ஆட் கொள்ளப் பெற்றவர்.

சேய்ஞலூர்ப் பிள்ளையாரைத் தந்தையாகிய அச்சதத்தன் எவ்வளவு அடித்த போதும் சினந்தாரல்லர். ஆனுல் அனைத்துயிர்க்கும் உயிராகிய இறைவன் பூசனைக்கு இடையூறு என்ற போது தந்தை மகன் உறவு இல்லை. இறைவன் தந்தையாக அனைத்துயிர்களும் பிள்ளைகளே. தந்தைக்குத்

தவறு நேரும் போது எச்சதத்தனும் விசாரசருமரும் ஒரு நிலைப்பட்டடவர்களே. தந்தைக்கு ஒரு பிள்ளை தவறு செய்வதை இன்னொரு பிள்ளை பார்த்துக் கொண்டிருக்க முடியாது. இந்நுட்பத்தைச் சேக்கிழார் ''அரனார் மகனார் ஆயினார்'' என்றார்.

தற்சார்பு பற்றிய தண்டனையைப் பொறுத்த விசாரசருமர் பொதுச் சார்பு பற்றிய குற்றத்துக்குத் தண்டனை வழங்கினார்.

திருக்கோயிற் பூசனை முறைகள் முட்டுங் காலத்தே சண்டேசுரர் வரலாறு பன்முறையும் நினைக்கப்படவேண்டிய ஒன்றாகும்.

## 32. ஒளி விளங்கு கதிர் உதயம்

திலகவதியார் பிறந்து சில முறை ஆண்டு அகன்றதன் பின்
அலகில் கலைத்துறை தழைப்ப அருந்தவத்தோர் நெறி வாழ
உலகில் வரும் இருள் நீக்கிஒளி விளங்குகதிர் போல
மலரும் மருள் நீக்கியார் வந்து அவதாரம் செய்தார் 45

திரு நின்ற செம்மையே செம்மையாகக் கொண்டதிரு நாவுக்கரசு என்றும் திருநாவுக்கரசு வளர் திருத் தொண்டின் நெறி வாழ வரு ஞானத் தவ முனிவர் வாகீசர் என்றும் போற்றப் பெறும் அப்பரடிகள் திலகவதியார் பிறந்து, முறைப்பட்ட சில ஆண்டுகள் கழிந்த பின் அவதாரம் செய்தார்.

கலைத்துறை தழைக்க, தவத்தோர் நெறி வாழ அவதரித்தார். தழைப்பதற்காகக் களைநீக்கமும், வாழ்வதற்காக ஒளியாக்கமும் தேவைப்படுவன ஆதலின் இருள் நீக்கி ஒளி விளங்குங் கதிர் போல என்றார்.

மருள் நீக்கியார் என்பது இவர் இளமைப் பெயர்.

## திலகம் வதியார் இருந்தார்

''தம்பியார் உளர் ஆக வேண்டும்''
என வைத்த தயா
உம்பர் உலகு அணையவுறும்
நிலை விலக்க, உயிர் தாங்கி
அம் பொன் மணி நூல் தாங்காது
அனைத்துயிர்க்கும் அருள் தாங்கி
இம்பர் மனைத்தவம் புரிந்து
திலகவதியார் இருந்தார் 4...

அத்திப் பழத்தின் கொசுக்கள் போல் பயனின்றி அழியாமல் திருநாவுக்கரசரை இல்லாத எதுவும் இல்வுலகில் இல்லை என்னும் வண்ணம், அவரை ஒரு உள்பொருளாக அமைத்த பெருமை திலகவதியாருக்கு உண்டு. திலகம் தரியாதவராய் தாலியைத் தாங்காதவராய் நின்ற திலகவதியார் தயவைத் தாங்கி, உயிர்கட் கெல்லாம் அருள் தாங்கி, தவம் தாங்கி இருந்தார்.

திலகவதியார் தம் உயிரை, மணம் பேசிய காரணத்தாலேயே தலைவனும் தகுதி பெற்றவர் உயிரோடு இசைவிக்க எண்ணிய காலத்தே, அன்னையும் அத்தனும் இறந்த பின்னும் நான் உம்மை அவர்களாகவே எண்ணி வணங்க முடியும் என்ற காரணத்தால் உயிரோடிருக்கிறேன்; என்னைத் தனியே விட்டுச் செல்வீராயின், தங்களுக்கு முன் யான் உயிர் நீப்பேன்'' என்று மருள் நீக்கியார் கூறியதே திலகவதியார் இருப்பதற்குக் காரணமாயிற்று.

திலகவதியார் இல்லையேல் திருநாவுக்கரசேது திருத்தொண்டேது; உழவாரம் தானேது.

## திருநீற்றுத் தீக்கை

திருவாளன் திருநீறு
திலகவதியார் அளிப்ப
''பெருவாழ்வு வந்தது'' எனப்
பெருந்தகையார் பணிந்து ஏற்று அங்கு
உருவு ஆர அணிந்து தமக்கு
உற்றவிடத்து உய்யும் நெறி
தருவாராய்த் தம் முன்பு
வந்தார்பின் தாம் வந்தார் 47

திருக்கோயிலின் உள் செல்லும் தகுதியைத் திருநீறே தீக்கையாக நின்று அளிக்கிறது. பெண்மைக்குத் தீக்கை அளிக்கும் உரிமையையும், தீக்கை செய்வதற்குப் பெரிய சடங்குகள் தேவையன்று, திருநீறு அளித்தலே போதும் என்ற எளிமையையும் இங்கே காணலாம்.

திருநீறே பெருஞ்செல்வம் ஆதலின் திருநீறு பெற்ற தைப் 'பெருவாழ்வு வந்தது' என எண்ணினர்.

மண்ணுலகில் வந்த முறைப்படியே திருக்கோயிலுக்கும் வந்தார் என்ற கவிநயம் தோன்ற தம் முன்பு வந்தார் பின் தாம் வந்தார்.

சான்றோரை முன்னிட்டுக் கொண்டு சந்நிதிக்குச் செல்லும் வழக்காறும் காண்க.

திருவாளன் என்ற சொல் சேர்ந்தறியாக் கையான் என்ற நுட்பப் பொருளை உணர்த்திச் சிவனைக் குறித்தது.

## திரு உழவாரத் தோற்றம்

மையல் துறை ஏறி மகிழ்ந்து அலர்சீர் வாகீசர்
மனத்தொடு வாய்மையுடன்
மெய்யுற்ற திருப்பணி செய்பவராய் விரவும்
சிவ சின்னம் விளங்கிடவே

எய்துற்ற தியானம் அருவுணர்வும்
ஈறின்றி எழும் திருவாசகமும்
கையில் திகழும் உழவாரமுடன் கைக்கொண்டு
கலந்து கசிந்தனரே 48

மனம் வாக்கு காயம் என்ற மூன்றற்கும் உரிய செயல் முறைகள் விளக்கப் பெறும் வகையில் அப்பரடிகளின் திருவுருவத்தை நம் கண்முன் கொண்டுவந்து நிறுத்துகிறார் சேக்கிழாரடிகள்.

சிவசின்னங்கள் விளங்கும் திருமேனி; தியானம் அருஉணர்வு தெளியும் திருமுகம்; திருவாசகத்தைச் சொல்லிக்கொண்டேயிருக்கும் திருவாய்; உழவாரம் திகழும் திருக்கைகள்.

மூன்றும் இணைந்து கசிதல் என்பது பொதுநிலை.

## நீற்றறை அனுபவம்

வெய்ய நீற்றறை அதுதான்
வீங்கு இளவேனிற் பருவம்
தைவரு தண்தென்றல் அணை
தண் கழுநீர்த் தடம் போன்று
மொய்யொளி வெண் நிலவு அலர்ந்து
முரன்ற யாழ் ஒலியினதாய்
ஐயர் திருவடி நீழல்
அருளாகிக் குளிர்ந்ததே 49

பல்லவன் ஆணையால் சமணர்கள் வாகீசரை நீற்றறையில் இட்டுப் பூட்டினர். அந்நீற்றறை ஈசன் எந்தை இணையடி நிழலாக மாறியது.

இளவேனிற் பருவம்; கருமுதிர்ந்த தாய்போல மெல்லத் தவழும் குளிரிளந் தென்றல்; வண்டுகள் ஒலிக்கும் மலர்

நிறை பொய்கை; மாலைக் காலத்து வெண்ணிலா. இத் துணையும் இணைந்த காலத்து அமைந்த வீணை ஒலி. குற்ற மற்ற வீணை ஒலி இவைகளாற் பெற்ற அனுபவம் நீற்றறை அனுபவம்.

வாகீசர் வாக்கின் வண்ணம் சைவசித்தாந்த முத்திப் பேரின்ப அனுபவமும் இத்தகைய தென்றுன்னுக.

## அஞ்செழுத்தரசு

இருவினைப் பாசமும் மலக்கல் ஆர்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்கள் ஏறிட
அருளும் மெய் அஞ்செழுத்தரசை இக்கடல்
ஒருகல் மேல் ஏற்றிடல் உறைக்க வேண்டுமோ? 50

வாகீசப் பெருந்தகையைக் கல்லிற் கட்டிக் கடலில் இட்டனர். திருவைந்தெழுத்தே புணையாகக் கரையேறினர்

கல்லில் ஆர்த்துக் கடலில் இடல் புதுமையன்று. நல் வினை என்னும் இரண்டு கயிறுகளால், ஆணவம் என்னும் கல் லோடு அனைத்துயிர்களும் கட்டப்பெற்று, பிறப்பு என்ற பெரிய கடலுக்குள் போடப் பெற்றுள்ளன. அவ்வுயிர்களை யெல்லாம் கரையேற்ற வந்த உழவாரப் படையாளி, திருத் தொண்டின் நெறி வாழ வாழ்ந்து காட்டியது போன்று, திருவைந்தெழுத்தையும் அருளுகின்றுர்.

அஞ்செழுத்தரசு என்று சேக்கிழார் வாகீசப் பெருந் தகையை அறிமுகப்படுத்துகிறுர். வேறொரு தத்துவமும் உண்டு.

'நாவுக்கரசு' என்ற திருப்பெயரே திருவைந்தெழுத்து: அது 'பக்த பஞ்சாட்சரம்' எனப் பெறும். அதனை ஓதி முத்தி பெற்றவர் அப்பூதியடிகள்.

## கரையேறியபின்
## அதிகை வரும் அப்பர் காட்சி

தூய வெண்ணீறு துதைந்த
பொன் மேனியும் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவருஞ்
சிந்தையும் நைந்து உருகிப்
பாய்வது போல் அன்பு நீர் பொழி
கண்ணும் பதிகச் செஞ்சொல்
மேய செவ்வாயும் உடையார்
புகுந்தனர் வீதியுள்ளே

## தில்லையில் வாகீசர்

கையும் தலைமிசை புனை அஞ்சலியன;
கண்ணும் பொழிமழை ஒழியாதே
பெய்யுந் தகையன; கரணங்களும் உடன்
பருகும் பரிவின; பேறு எய்தும்
மெய்யும் தரைமிசை விழும் முன்பு எழுதரும்,
மின் தாழ் சடையொடு நின்று ஆடும்
ஐயன் திருநடம் எதிர் கும் பிடும் அவர்
ஆர்வம் பெருகுதல் அளவு இன்றால் 52

## அரசுங் கன்றும்

தொழுது அணைவுற்று ஆண்ட அரசு அன்புருகத்
தொண்டர் குழாத்திடையே சென்று
பழுதில் பெருங் காதலுடன் அடிபணியப்
பணிந்தவர் தம் கரங்கள் பற்றி
எழுதரிய மலர்க்கையால் எடுத் திறைஞ்சி
விடையின் மேல் வருவார் தம்மை
அழுது அழைத்துக் கொண்டவர் தாம்
'அப்பரே' என அவரும் 'அடியேன்' என்றார்.

வாகீசர் வருகையை அறிந்த ஞானசம்பந்தர் வர வேற்கத் தொண்டர் குழாத்துடன் சென்று கொண்டிருந் தார். திருக்கூட்டத்தார் அறியாவாறு, அக்கூட்டத்தின் இடையிற் சென்று, ஞான சம்பந்தப் பெருமானின் திருவடி களில் வீழ்ந்து வணங்கினுர் வாகீசர். பணிந்தவர் கரங்களை எடுத்து, வணங்கி, தம்மையும் விஞ்சி முன் பணிந்தார் என்னுங் குறிப்பில் 'அப்பரே' என்று ஞானப்பாலுண்ட திருவாயாலழைக்க, அடியேன் என்று சொல்லி நின்ருர் வாகீசர்.

சுட்டிக் காட்டலாகப் பரம் பொருளை 'இவனே. என்று சுட்டிக் காட்டிய பெருமையுடைய திருக்கைகளானமையின் ஞானசம்பந்தப் பெருமான் திருக்கைகளை 'எழுதரிய மலர்க் கைகள்' என்ருர்.

## இருபெருங் குரவரும் இணைந்த காட்சி

அருட் பெருகு தனிக்கடலும் உலகுக்கு எல்லாம்
அன்பு செறி கடலும் ஆம் எனவும் ஓங்கும்
பொருட் சமய முதற் சைவ நெறிதான் பெற்ற
புண்ணியக் கண் இரண்டெனவும் புவனம் உய்ய
இருட்கடு உண்டவர் அருளும் அகிலம் எல்லாம்
ஈன்ருள் தன் திருவருளும் எனவும் கூடித்
தெருட்கலை ஞானக் கன்றும் அரசும் சென்று
செஞ்சடை வானவர் கோயில் சேர்ந்தார் அன்றே

| ஞானக்கன்று | அரசு |
|---|---|
| அருட் கடல் | உலகுக்கு எல்லாம் அன்பு செறிகடல் |
| சைவ நெறி பெற்ற | புண்ணியக் கண்கள் |
| நீலகண்டன் திருவருள் | தாயருள் |

ஒரே காலத்தில் இரு பெருங் குரவர்களை இவ்வுலகுக்கு அனுப்பித் தொண்டாற்றச் செய்கிறது திருவருள்.

ஞான சம்பந்தப் பெருமான் பணி முழுவதும் உயிர்கள் இறைவனை உணர்ந்துய்யும் நெறியைச் சார்ந்ததாகவும், அப்பர் பெருமான் பணி முழுவதும், உயிர்கள் இறைவனைத் திருத்தொண்டால் அடைந்துய்யும் நெறியைச் சர்ந்ததாக வும் ஆன்றோர் கொள்வர்.

## பாதமலர் சூட்டப் பெற்ற பாவரசர்

நன்மை பெருகு அருள் நெறியே
    வந்தணைந்து நல்லூரில்
மன்னு திருத் தொண்டனுர்
    வணங்கி மகிழ்ந்து எழும் பொழுதில்
**''உன்னுடைய நினைப்பதனை**
    **முடிக்கின்றோம்''** என்று அவர்தம்
**சென்னி மிசைப் பாதமலர்**
    **சூட்டினுன்** சிவபெருமான் 55

அப்பரடிகள் திருச்சத்திமுற்றத் தலம் வணங்கிக் 'கோவாய் முடுகி' என்னும் பதிகம் பாடி, பூவாரடிச்சுவடு என்மேற் பொறித்து வை'' என வேண்ட, ''நல்லூருக்கு வா'' என ஆணை பிறக்கிறது. திருநல்லூரில் வந்து வணங்கி மகிழ்ந்து எழும் போது, இறைவன் அப்பரடிகளின் சென்னி யில் தம் பாத மலர்களைச் சூட்டித் திருவடி தீக்கை செய்தருளினுன்.

## ஆரூரில் அப்பர் சமுதாயப் பணி

மார்பாரப் பொழி கண்ணீர்
    மழை வாரும் திருவடிவும் மதுர வாக்கில்
சேர்வாகும் திருவாயில் தீந்தமிழின்
    மாலைகளும் செம்பொன் தாளே

சார்வான திருமனமும் உழவாரத்
    தனிப் படையும் தாமும் ஆகிப்
**பார்வாழத் திருவீதிப் பணி செய்து**
    பணிந் தேத்திப் பரவிச் செல்வார் 56

திருவாரூர்த் திருவீதியில் சமுதாயத் தொண்டு செய்கிறார் அப்பரடிகள். தம்முடைய கடமை எனக் கொண்டு இப்பணியைச் செய்யவில்லை. இவ்வுலக மக்கள் வாழ்வதற்காக அவர் செய்தார். இயலாமையால் மக்கள் செய்ய வேண்டிய காரியங்களைப் பெற்றோரே செய்தல் போல உணராத காரணத்தாலும் பொய்ம் மானப் போக்காலும் இவ்வுலக மக்கள் செய்யாத சமுதாயப் பணியை அவர் பொருட்டு அப்பரடிகளே செய்தமைத்தார் என்பது கருத்து.

## வாசி இல்லாக் காசு

ஈசர் மிழலை இறையவர் பால்
    இமையப் பாவை திருமுலைப்பால்
தேசம் உய்ய உண்டவர் தாம்
    திருமா மகனார் ஆதலினால்
காசு வாசியுடன் பெற்றார்
    **கைத் தொண்டாகும் படிமையினால்**
வாசி இல்லாக் காசு படி
    பெற்று வந்தார் வாகீசர்

திருவீழிமிழலையில் பஞ்சம் தீர்க்க இறையருளால் படிக்காசு பெற்றனர் ஆளுடைய பிள்ளையும் அரசும். ஞானசம்பந்தரின் படிக்காசு; மாற்றுக் குறைந்திருந்தது. வாசி இல்லாக் காசினைப் பெற்றார் அரசு.

ஞான சம்பந்தர் திருமாமகன் ஆதலால் வாசியுடன் கூடிய காசு; அப்பரடிகளோ கைத்தொண்டு செய்து அதன் பயனாகப் பெறும் முறையுடையர் ஆகையினால் மாற்றுக்

குறைவு இல்லாத படிக்காசினைப் பெற்றார் எனச் சேக்கிழார் விளக்கிக் காட்டுகிறார்;

## உண்ணாவிரத முதல் முனி

வண்ணங் கண்டு நான் உம்மை
　　வணங்கியன்றிப் போகேன் என்று
எண்ணம் முடிக்கும் வாகீசர்
　　இருந்தார் அமுது செய்யாதே
அண்ணலாரும் அது உணர்ந்து அங்கு
　　அரசு தம்மைப் பணிவதற்குத்
திண்ணமாக மன்னனுக்குக் கனவில்
　　அருளிச் செய்கின்றார்　　　　58

முடியாட்சியை எதிர்த்த முதல் துறவி; அச்சம் இல்லை என்று பாடிய முதன்மைப் புரட்சிக் கவி; சமுதாய நலம் பேணிக் கைத் தொண்டு செய்த முதன்மைச் சமுதாயக் காவலர் என்றெல்லாம் புகழப் பெறும் அப்பரடிகள் உண்ணா விரதம் தொடங்கிய முதல்வராகவும் அமைகின்றார்;

பழையாறை, பழையாறை வடதளி என இரண்டு திருக் கோயில்கள். வடதளி சமணர்களால் மறைக்கப் பெற்றது. மறைந்துள்ள அதனைச் சமணர் கோயில் என்று சூழ்ச்சி செய்தனர். உள்ளே சிவன் திருக்கோயில் மறைக்கப் பெற் றுள்ளது என்பதை அப்பரடிகள் ஞானக் கண்ணால் அறிந் தார். அதன் வண்ணங் கண்டு வணங்கியன்றிப் போகேன் என்று உண்ணா நோன்பு மேற்கொண்டார்.

பின்னர், இறைவன் அரசன் கனவில் உணர்த்த, அரச ஞணையால் அவ்விடம் அகழப் பெற, அக்கோயில் வெளிப் பட்டது. கண்டு வணங்கிச் சென்றார்.

## கயிலைக் காட்சி வேண்டல்

''அண்ணலே எனை ஆண்டு கொண்டருளிய அமுதே
விண்ணிலே மறைந்து அருள்புரி வேத நாயகனே
கண்ணினால் திருக்கயிலையில் இருந்த நின் கோலம்
நண்ணி நான் தொழ நயந்தருள் புரி எனப் பணிந்தார் 59

## ஐயாற்றில் அக்காட்சி

''பொன்மலைக் கொடியுடன் அமர் வெள்ளியம் பொருப்பில்
தன்மையாம் படி சத்தியும் சிவமுமாம் சரிதைப்
பன்மை யோனிகள் யாவையும் பயில்வன பணிந்தே
மன்னு மாதவர் தம்பிரான் கோயில் முன் வந்தார்'' 60

## அப்பர் எங்குற்றார் ?

திருஞான மாமுனிவர் அரசிருந்த பூந்துருத்திக்கு
அருகாக எழுந்தருளி ''எங்குற்றார் அப்பர்?'' என
உருகா நின்று ''உம் அடியேன் உம் அடிகள் தாங்கி வரும்
பெருவாழ்வு வந்து எய்தப்பெற்று இங்குற்றேன்'' என்றார்
61

கல்மனத்து வல்லமணர் தங்களை வாதத்தாற் கட்ட ழித்து, தென்னவன் கூன் நிமிர்த்தருளி, திருநீற்றின்ஒளியே உலகில் சிறக்கப்பண்ணி, சண்பைவரும் தமிழ்விரகர் திருப் பூந்துருத்தியைச் சாரவருஞ் செய்தியை மண்பரவும் பெருங் கீர்த்தி வாகீசர் கேள்விப்பட்டு, கண்பெருகுங் களிகொள் ளக் கண்டிறைஞ்ச வேண்டும் என்ற பெருவிருப்பத்தால் உடனுறைவார் அறியாமே சென்று, தொண்டர் குழாத் திடை புகுந்து, தொண்டர் காணுமே தொழுது, தமிழ் விர கரைத் தாங்கும் மணிமுத்தின் சிவிகையினைத் 'தாமும் உடல் இதுகொண்டு தாங்குவேன்' எனத் தாங்கிவர, திருப்பூந்

துருத்திக்கு அருகாக வந்ததும் அப்பர் எங்குற்ருர்? என ஞானசம்பந்தர் வினவினர்.

''அடியேன் உம் அடிகள் தாங்கிவரும் பெருவாழ்வு வந்து எய்தப்பெற்று இங்குற்றேன்'' என்ருெரு குரல் வந்தது. கேட்டவுடன், ஞானசம்பந்தப் பெருமானும் விரைவாக இறங்கி, உள்ளமிகு பதைப்பு எய்தி அப்பரடிகளை வணங்கினர்.

## ஓடும் பொன்னும் ஒக்க நோக்குதல்

**செம்பொன்னும் நவமணியும் சேண்விளங்க ஆங்கெவையும்**
**உம்பர்பிரான் திருமுன்றில் உருள் பருக்கையுடன் ஒக்க**
எம்பெருமான் வாகீசர் உழவாரத்தினில் ஏந்தி
வம்பலர்மென் பூங்கமல வாவியினிற் புக எறிந்தார் **62**

உழவாரப்படை செல்லும் இடங்களிலெல்லாம் பொன்னும் நவமணிகளும் புக்கு வந்தன. பருக்கைக் கற்களுடன் அவைகளையும் சேர எடுத்து அடுத்துள்ள குளத்தில் வீசி எறிந்தார். புல்லும் கல்லும் பொன்னும் மணியும் அவர்தம் பார்வையில் பட்டபோது, அனைத்தும் ஒரு தன்மைத் தாகவே காணப்பெற்றன. சொல்லால் வேறுபாடு என்பதைத்தவிர, பொருளால் வேறுபாடு அறியப்பெறவில்லை.

## அரம்பையர் தோல்வி

இத்தன்மை அரம்பையர்கள் எவ்விதமும் செயல்புரிய
**அத்தனர் திருவடிக்கீழ் நினைவகலா அன்புருகு**
**மெய்த்தன்மை உணர்வுடைய விழுத்தவத்து மேலோர்தம்**
**சித்தநிலை திரியாது செய்பணியின் தலைநின்ருர். 63**

ஞானத்தவமுனியாக விளங்கிய அப்பரடிகள் அரம்பையர்கள் பலவகையான சாகசச் செயல்களைப் புரிந்த போதும் சித்தம் நிலைதிரியாது செய்பணியைச் செம்மையுறச் செய்து வந்தார்.

உழவாரப் படையைச் செலுத்தும் இடங்களிலெல்லாம் பொன்னும் மணியும் புகச் செய்ததும், அரம்பையர்களை அனுப்பிச் சாகசம் புரியச் செய்ததும் இறைவன் அப்பரடிகளின் மனப்பக்குவத்தை அறிவதற்குச் செய்த சோதனைகள் என எண்ணுவது உலகியல்பு. அது பெரும்பிழை.

சோதனை செய்ய வேண்டிய நிலை இறைவனுக்கில்லை. அது ஒருவகையில் தத்துவ முரணாக அமையும். உலகவர் கண்களுக்கு உள்ளத்துக்கு அப்பரடிகளை விளக்கமுறுத்திக் காட்டும் செயலேயன்றி வேறன்று.

## அண்ணலார் சேவடியில் அரசு

மண்முதலாம் உலகேத்த மன்னுதிருத் தாண்டகத்தை
''புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்''
எனப் புகன்று
நண்ணரிய சிவானந்த ஞானவடி வேயாகி
அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்டஅரசு அமர்ந்திருந்தார்
64

சித்திரைச் சதயமாம் திருநாளில், 'புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே' என்றும் திருத்தாண்டகம் பாடிக்கொண்டே, சிவானந்த ஞான வடிவைப் பெற்று, சிவன் சேவடிக்கீழ் சென்று அமர்ந்தார்.

## 33. குலக்கொடுமை சிறைவைத்த குலச்சிறையார்

குறியில் நான்கு குலத்தினர் ஆயினும்
நெறியின் அக்குலம் நீங்கினர் ஆயினும்
அறிவு சங்கரற்கு அன்பர் எனப்பெறில்
செறிவுறப் பணிந்து ஏத்திய செய்கையார் 65

சாதி குலம் என்னும் தடைப்பட்டுச் சிக்குருமல் சிவனுக்கு அன்பர் என்ற வகையில் சிவனடியவர்களுக்கு வணங்கித் தொண்டாற்றும் செய்கையுடையவர் குலச் சிறையார்.

இனம் இனத்தை அறியும் என்ருற்போல அமைச்சுத் தொழிலாற்றிய சேக்கிழார் அமைச்சராயமைந்த குலச் சிறையாரை நோக்கி ஆராய்கிருர். சுந்தரரால் 'பெருநம்பி' என்று பாராட்டப் பெற்ற குலச் சிறையாரிடம் சேக் கிழாரை மிகுதியும் கவர்ந்த செயல் ஒன்று உண்டு.

வாதில் தோற்ருல் என் செய்வது? என்ற வினவை எழுப்பியதும், தோற்றபோது அவர்களைக் கழுவில் ஏற்று வித்தவரும் குலச்சிறையாரே. இது நீதிக்காப்பு. மந்திரியின் கடமை:

வாதில் தோற்ற அமணரை வன்கழு தீது நீங்கிட ஏற்று வித்தார் திறம் யாது போற்றினேன்? என்று உளமுருகிப் பாடுகிருர் சேக்கிழார்.

## 34. மிழலை வந்த சிவயோகி

அஞ்சைக் களத்து நஞ்சுண்ட
அமுதைப் பரவி அணைவுறுவார்
செஞ்சொல் தமிழ்மாலைகள் மொழியத்
தேவர் பெருமான் அருளாலே

மஞ்சில் திகழும் வடகயிலைப்
பொருப்பில் எய்த வரும் வாழ்வு
நெஞ்சில் தெளிய இங்குணர்ந்தார்
நீடு மிழலைக் குறும்பனூர். 66

திருநாவுக்கரசு என்னும் திருநாமத்தையே மந்திரமாகக் கூறி முத்திபெற்ற அப்பூதியடிகளைப் போல சுந்தரர் பெருமான் பெயரையே மந்திரமாக மொழிந்து யோகியானவர். ஆரூரரைத் தன் கண்ணிற் கருமணியாகக் கொண்டு வாழ்ந்தவர்.

திருவஞ்சைக்களத்தில் சுந்தரர்பெருமான் கயிலை வாழ்வை வேண்டிப் பாடுகிறூர். அப்பாடலைக் கேட்ட சிவபெருமான் ஆரூரன் கயிலை வரவேண்டிய காலம் வந்துவிட்டது, அவனை அழைக்கவேண்டும் என எண்ணினுன். சிவன் உள்ளத்தில் அந்த எண்ணம் தோன்றியதை அக்கணமே நெஞ்சில் தெளிய இப்பூவுலகில் உணர்ந்த ஒருவர் பெருமிழலைக் குறும்பர். சிவன் அருளால் நாளை வெள்ளையானை வரும்; கண்ணிற்கரிய மணிகழிய யான் இங்கு வாழேன் என்று கூறி, ஆரூரர் நாளை வருவார், நான் இன்றே செல்வேன் யோகத்தால் என்று சொல்லிச் சென்ற சிவயோகி.

## 35. நம்மைப் பேணும் அம்மை

''வரும் இவள் நம்மைப் பேணும்
அம்மை காண் உமையே பற்றிப்
பெருமைசேர் வடிவும் வேண்டிப்
பெற்றனள்; என்று பின்றை
அருகு வந்து அணைய நோக்கி
''அம்மையே'' என்னுஞ் செம்மை
ஒருமொழி உலகம் எல்லாம்
உய்யவே அருளிச் செய்தார். 67

மெய்யில் ஊனடை வனப்பை எல்லாம் உதறி என்பு உடம்பேயாக, வானமும் மண்ணும் எல்லாம் வணங்கு பேய் வடிவம் ஆய அம்மையார் காலால் நடத்தலைத் தவிர்ந்து தலையினால் நடந்து திருக்கயிலையை அடைந்தார். அப்போது இறைவன் தனக்குத் தாய் இல்லை என்ற குறையை நீக்கிக் கொள்ளுதற்காகப் போலும், மூன்று முறை அம்மையே" என அழைக்கின்றான்.

### அம்மை வேண்டிய வரம்

இறவாத இன்ப அன்பு
வேண்டிப் பின் வேண்டுகின்றார்
"பிறவாமை வேண்டும் மீண்டும்
பிறப்பு உண்டேல் உன்னை என்றும்
மறவாமை வேண்டும் இன்னும்
வேண்டும் நான் மகிழ்ந்து பாடி
அறவா! நீ ஆடும்போது உன்
அடியின் கீழ் இருக்க" என்றார். 68

## 36. திருநாவுக்கரசர் திருவடி தொழுத பயன்

அப்பூதி அடிகளார் தம்
அடிமையைச் சிறப்பித்து ஆன்ற
மெய்ப்பூதி அணிந்தார் தம்மை
விரும்பு சொன்மாலை வேய்ந்த
இப்பூதி பெற்ற நல்லோர்
எல்லையில் அன்பால் என்றும்
செப்பு ஊதியம் கைக்கொண்டார்
**திருநாவுக்கரசர் பாதம்** 68

அப்பூதி அடிகள் அந்தணர்; திருநாவுக்கரசரிடத்தில் பக்திகொண்டவர். நாணில் அமண் பதகருடன் ஒன்றிய மன்னவன் சூழ்ச்சிகளையெல்லாம் திருத்தொண்டின்உறைப் பாலே வென்றவர் என்றும் நம்மை உடையவர் கழற்கீழ்

நயந்த திருத்தொண்டாலே இம்மையிலும் பிழைப்பது என என்போல்வாரும் தெளியச் **செம்மைபுரி** திருநாவுக்கரசர் என்றும் மதித்து, அவர்தம் திருநாமத்தையே உச்சரித்து மூத்தி பெற்றவர். அப்பரடிகளாலேயே திருப்பதிகத்தில் வைத்துச் சிறப்பித்துப் பாடப்பெற்ற பேறுபெற்றவர். திருநாவுக்கரசர் பாதம் செப்பு ஊதியம் கைக்கொண்டார் என்று போற்றுகிறார் சேக்கிழார்.

## 37. வேதிகையின் மருங்கே பாணருக்கு இருக்கை

நின்ற அன்பரை 'நீலகண்டப் பெரும் பாணர்க்கு
இன்று தங்க ஓர் இடங்கொடுத் தருளுவீர்' என்ன
**நன்றும் இன்புற்று நடுமனை வேதியின் பாங்கர்ச்
சென்று மற்றவர்க்கு இடம் கொடுத்தனர்** திருமறையோர்"
69

திருஞானசம்பந்தருடன் திருநீலகண்ட யாழ்ப்பாணர் யாத்திரை தொடர்வார். அங்கங்கே ஞானசம்பந்தர் பதிகம் பாடும்போது அதனை யாழில் அமைத்து வாசிப்பார். அவர் தீண்டத் தகாதவர்.

திருநீலநக்க நாயனார் வேதியர். திருஞான சம்பந்தரைத் தம் இல்லத்துக்கு அழைத்து விருந்து பேணுகிறார். இரவு திருநீலகண்ட யாழ்ப்பாணரும், அவர் மனைவியாரும் தங்குதற்கு எங்கே இடம் அமைத்திருக்கிறார்? என்ற எண்ணத்தால் ஞானசம்பந்தர் திருநீலநக்கரிடம், தங்குதற்கு இடம் கொடுக்க என்றார்.

திருநீலநக்கர் வேத முறைப்படி நாள்தோறும் அக்கினிக் காரியம் செய்தற்குரிய வேதிகையின் பக்கம் இருக்கை அமைத்துக்கொடுத்தார். வேதிகையில் எப்போதும் தீ அறாது இருக்கும். திருநீலகண்ட யாழ்ப்பாணர் அங்கே

சென்று தங்கியதும் அங்குள்ள நெருப்பு வலமாகச் சுற்றி எழுந்து, அதிக ஒளியுடன் ஓங்கி எரிந்தது.

திருநீலநக்கர் இடம் அளித்தபோது அவருடைய மன நிலை எவ்வாறு இருந்தது என்பதை **'நன்றும் இன்புற்று'** என்று சொல்லுவதன்மூலம் விளக்கினர் சேக்கிழார்.

## 38. தொண்டர்க்கு ஆணி

*நீறுபுனைவார் அடியார்க்கு*
 நெடுநாள் நியதியாகவே
வேறு வேறு வேண்டுவன
 எல்லாம் செய்து மேவுதலால்
ஏறு சிறப்பின் மணிப்புற்றில்
 இருந்தார் **தொண்டர்க்கு ஆணி** எனும்
பேறு திருநாவுக்கரசர்
 விளம்பப் பெற்ற பெருமையினர் 70

நமிநந்தியடிகள் என்பார் நீரால் விளக்கெரித்த நேர்மைமிகு நற்றொண்டர். ஒருநாள் திருவாரூர்ப் பெருமான் திருவிழா எழுந்தருளுதலைக் கண்டு மகிழ்ந்து வந்தவர் இல்லத்தில் அக்கினி வளர்த்துப் பூசை செய்யாமல் குளிக்க வேண்டும் என்று மனைவியாரிடம் கூறினர். காரணம் என்? என வினவிய மனைவியாருக்கு, இறைவன் உலாப்போகும் போது எல்லாச் சாதியாரும் வந்து போனதால் தீட்டுப்பட்டு விட்டது. குளித்துத் தூய்மை செய்தே உள்புக வேண்டும் என்று கூறினர். உடனே அவருக்கு இறையருளால் உறக்கம்வர, கனவில் இறைவன் **'ஞான மறையோய்' ஆரூரிற் பிறந்தார் எல்லாருமே நம் கணங்கள் ஆன பரிசு காண்பாய்' என்று கூறி, சாதித் தீட்டைத் தகர்க்கப் பணித்தார்.** அதன் பின்னர் நமிநந்தியடிகள் திருநீறு புனைந்தவர் எல்லாருமே அடியார் என எண்ணி தொண்டு செய்தார். இதனை எடுத்துக் காட்டவே திருநாவுக்கரசர், நமிநந்தியடிகளைத் 'தொண்டர்க்கு ஆணி' எனப் பாராட்டினர்.

## 39. பிள்ளையைப் பரவுவாம்

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்க
பூத பரம்பரை பொலியப் புனிதவாய் மலர்ந்து அழுத
சீதவள வயற் புகலித் திருஞான சம்மந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம் 71

உலகனைத்திலும் உடம்போடு கூடி வாழ்கின்ற உயிர்த் தொகுதிகள் விளக்கம் பெறவேண்டும் என்பதற்காகவே புனித வாய் மலர்ந்து அழுதவர் ஞானசம்பந்தப் பெருமான்; ஞானப்பால் உண்டது தம் பசிக்கன்று; உலகவர்க்கு உண்மை நாட்டம் காட்டுதற்கு. ஞானசம்பந்தப் பெருமான் தேவாரத்தின் மூலம் தத்துவ உண்மையையும் பக்திச் சுவையையும் ஊட்டியபோதிலும் திருநீற்றின் பெருமையை உலகத்துக்கு அருளியதே அவர் தொண்டின் தலைமை என அறிக. திருநீற்று இன்னொளியால் பூதபரம்பரை பொலியும்.

### சீகாழியின் பன்னிரு பெயர்கள்

**பிரமபுரம் வேணுபுரம் புகலி** பெரு **வெங்குரு** நீர்ப்
பொருவில் திருத் **தோணிபுரம் பூந்தராய் சிரபுரம்** முன்
வரு **புறவம் சண்பை**நகர் வளர் **காழி கொச்சைவயம்**
பரவு **திருக் கழுமலம்** ஆம் பன்னிரண்டு
திருப்பெயர்த்தால் 72

### பிள்ளையார் அவதாரப் பயன்

தொண்டர் மனம் களி சிறப்ப, **தூய திருநீற்று நெறி**
**எண்டிசையும் தனி நடப்ப** ஏழுலகும் குளிர் தூங்க
அண்டர் குலம் அதிசயிப்ப அந்தணர் ஆகுதி பெருக
**வண்தமிழ் செய் தவம் நிரம்ப** மாதவத்தோர் செயல்
வாய்ப்ப 73

திசையனைத்தின் பெருமை எலாம் தென்திசையே
வென்றேற
மிசையுலகும் பிறவுலகும் மேதினியே தனிவெல்ல
அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல் வழக்கின் துறை
வெல்ல
இசை முழுதும் மெய்யறிவின் இடங்கொள்ளும்
நிலைபெருக. 74

அவம்பெருக்கும் புல்லறிவின் அமண்முதலாம் பரசமயப்
பவம் பெருக்கும் புரைநெறிகள் பாழ்பட நல்லூழி
தொறும்
தவம் பெருக்கும் சண்பையிலே தாவில்சராசரங்களெலாம்
சிவம் பெருக்கும் பிள்ளையார் திரு அவதாரம் செய்தார் 75

## திருநீற்றுக் காப்பு

ஆறுலவு செய்யசடை ஐயர் அருளாலே
பேறு உலகினுக்கு என வரும் பெரியவர்க்கு
வேறு பல காப்பு மிகை என்று அவை விரும்பார்
நீறு திருநெற்றியில் நிறுத்தி நிறைவித்தார் 76

திருஞானசம்பந்தருக்கு இளமைக் காலத்தே இடையூறு வாராமல் இருப்பதற்காக மந்திர முறைப்படி ஐம்படைத் தாலி முதலியவைகளை அமைத்தல், வேத வேள்வி மூலம் காப்புக்கட்டுதல் போன்றவைகளைச் செய்யவில்லை. திருநீறு பூசுதலே உயர்ந்த பெருங் காவலைத் தரும் என அதையே நிறைவித்தனர்.

## மூவாண்டில் உலகுய்ய நிகழ்ந்தது

எண்ணரிய சிவஞானத்து இன்னமுதம் குழைத்தருளி
உண் அடிசில் என ஊட்ட உமையம்மை எதிர்நோக்கும்
கண்மலர் நீர் துடைத்தருளிக் கையில் பொற்கிண்ணம்
அளித்து
அண்ணலை அங்கு அழுகை தீர்த்து அங்கணனார்
அருள்புரிந்தார்'' 77

யாவருக்குந் தந்தைதாய் எனும்இவர் இப்படியளித்தார்
ஆவதனுல் ஆளுடைய பிள்ளையா ராய் அகில
தேவருக்கும் முனிவருக்கும் தெரிவரிய பொருளாகும்
தாவில் தனிச் சிவஞான சம்பந்தர் ஆயினுர் 78

## ஞானம் உணர்ந்த நன்னிலை

சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில் 79

ஞானப்பாலருந்தி ஞானம் பெற்ற அந்நிலையிலேயே ஞானசம்பந்தப் பெருமானைத் தவமுதல்வர் என்று பாராட்டினுர். எப்பொருளையும் ஆக்குபவன் ஈசனே என்னும் உணர்வும் அப்பொருள்தான் எது என்னில் ஆளுடையார் அடியார்களே என்னும் அறிவும் இணைந்தபோது சிவ ஞானம் ஆகிறது. அதனுற் பெற்ற பயன் சிவனடியை இறைப் பொழுதும் மறவாமற் சிந்திக்கும் பேறு.

இரண்டாவது பிறவியை அறுக்கும் ஞானம் பவமதனை அறமாற்றும் பாங்கு உடைய ஞானம். இது தற்போதத்தை அழிக்கும்.

மூன்ருவது மெய்ஞ்ஞானம் உவமையால் உணர்த்த முடியாத கலைஞானங்களாலும் உணர்ந்து கொள்ள முடியாத அளவுக்கு உயர்ந்த மெய்ஞ்ஞானம். இது உள்நின்றெழும் ஞானம். ஒரு நெறிய மனம் வைத்துணர் ஞான சம்பந்தன் என்று போற்றப் பெறுதற்குரிய உண்மை ஞானம்.

இவற்றைப் பெற ஞானசம்பந்தர் முன்னைப் பல பிறப்புக்களிற் தவம் பல செய்து முதல்வரானுர் என்பது சேக்கிழார் வாக்கு.

## தோடுடைய செவி

செம்மைபெற எடுத்த திருந்
தோடுடைய செவியன் எனும்
மெய்ம்மைமொழித் திருப்பதிகம்
பிரமபுரம் மேவினுர்
தம்மை அடையாளங்களுடன்
சாற்றித் தாதையார்க்கு
''எம்மை இது செய்தபிரான்
இவனன்றே'' என இசைத்தார் 80

உள் நிறைந்து பொழிந்து எழுந்த உயர்ந்த ஞானத் திருமொழியால், எல்லையில்லாத பெருமையையுடைய ஓம் என்னும் மறையின் முதல் எழுத்தை, தகர வித்தை என்றும் தகராலயம் என்றும் சொல்லப் பெறும் ஞானத்தை உணர்த்துவதற்கு உரிய எழுத்தாக அமைந்த மெய்யெழுத்தாகிய 'த்' என்பதனோடு இணைத்து [த்+ஓ= தோ]; வளமை பலவும் கொண்டுள்ளதாய், நெடுமை உடையதாய் அமைந்த எழுதும் மறையாகிய தமிழால் இம்மாநிலத்தவர்க்கு எடுத்து மொழியத் தொடங்கினுர்.

'தோ' என்ற எழுத்தை முதலாக வைத்துத் தொடங்குவதற்குக் காரணம் அமைத்தாற் போல, தம்முடைய பாடல் பரமரிடம் செல்லுவதற்கு உரிய வழி செவியாதலின் அதனைச் சிறப்பித்து, 'தோடுடைய செவியன்' என்று கூறமுற்பட்டார்;

'தோடுடைய செவியன்' எனத் தொடங்கும் திருப் பதிகம் மெய்ம்மை மொழித் திருப்பதிகம்,

## இருபிறப்பின் சடங்குநிலை

ஒருபிறப்பும் எய்தாமை உடையார் தம்மை
உலகியல் பின் உபநயன முறைமையாகும்
இருபிறப்பின் நிலைமையினைச் சடங்கு காட்டி
எய்துவிக்கும் மறைமுனிவர் எதிரே நின்று
'வருதிறத்தின் மறை நான்குந் தந்தோம்' என்று
மந்திரங்கள் மொழிந்தவர்க்கு மதுரவாக்கால்
பொருவிறப்ப ஓதினர் புகலிவந்த
புண்ணியனர் எண்ணிறந்த புனிதவேதம் 81

திருஞானசம்பந்தருக்கு உபநயனச் சடங்கு ஏற்பாடாயிற்று. வேதபாரகர்கள் வந்து பலவகைச் சடங்குகளைச் செய்வதன் மூலம் இருபிறப்பின் நிலைமையை விளக்கினர்கள். ஞானவள்ளல் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்து, தமக்கு நான்கு வேதங்களையும் உணர்த்த வந்தோம் என்று வந்த அவர்களிடத்தில் இனிய ஞானம் பொருந்திய தமிழால் ஞானசம்பந்தர் புனிதவேதம் பலவற்றைக் கூறினர்.

## சம்பந்தர் கண்ட அப்பர்

சிந்தை இடையறு அன்பும்
திருமேனி தன்னில் அசைவும்
கந்தம் மிகையாம் கருத்தும்
கை உழவாரப் படையும்
வந்துஇழி கண்ணீர் மழையும்
வடிவிற் பொலி திருநீறும்
அந்தம் இலாத் திருவேடத்து
அரசும் எதிர் வந்து அணைய 82

அப்பரடிகளை முன்பார்த்திராத ஞானசம்பந்தர் அவர் வருகையைக் கேள்வியுற்றார். பழுத்த மெய்த்தொண்டர்

ஒருவரின் தோற்றம் எவ்வாறு இருக்கும் என்று ஞானப் பாலுண்டு ஞானசம்பந்தம் பெற்று, பொருளுண்மையை வரையறுக்கும் மெய்ஞ்ஞானக் கண்கொண்டு சிந்தித்து தம் உள்ளக் கிழியில் உரு ஒன்றை அமைத்திருந்தார். அப்ப ரடிகளைக் கண்டவுடன் **'கருத்தில் பரவு மெய்க்காதல் தொண் டர் திருவேடம் நேரே தோன்றியது'** என்று தொழுதார். சேக் கிழார் வரையறுக்கும் இம்மெய்ம் மொழிப் பொருள் விளக் கத்தோடு அப்பரடிகள் திருவுருவத்தை நோக்கி வணங்குக.

## ஞானசம்பந்தரின் வருகைப்பயன்

**''சென்ற காலத்தின் பழுதிலாத் திறமும்**
**இனி எதிர்காலத்தின் சிறப்பும்**
**இன்று எழுந்தருளப் பெற்ற பேறு இதனால்**
**எற்றைக்கும் திருவருள் உடையேம்**
**நன்றியில் நெறியில் அழுந்திய நாடும்**
**நற்றமிழ் வேந்தனும் உய்ந்து**
**வென்றிகொள் திருநீற்று ஒளியினில் விளங்கும்**
**மேன்மையும் படைத்தனம்''** என்பார் 83

மதுரைக்கு எழுந்தருளிய ஞானசம்பந்தப் பெருமானை மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் சென்று வர வேற்ற நிலையில் சேக்கிழார் ஆக்கிய வரவேற்பு.

## 'பையவே சென்று பாண்டியற்காக'

பாண்டிமா தேவியார் தமது பொற்பில்
பயிலும் நெடு மங்கலநாண் பாதுகாத்தும்
ஆண்டகையார் குலச்சிறையார் அன்பினாலும்
அரசன்பால் அபராதம் உறுதலாலும்

மீண்டு சிவ நெறியடையும் விதியினாலும்
வெண்ணீறு வெப்பு அகலப் புகலிவேந்தர்
தீண்டியிடப் பேறுடையன் ஆதலாலும்
தீப்பிணியைப் ''பையவே செல்க'' என்று 84

திருஞானசம்பந்தர் தங்கியிருந்த திருமடம் சமண் குண்டர்களால் தீயூட்டப் பெறுகிறது. அத்தீயினைப் பிள்ளையார் பாண்டியனுக்கு ஆக்க முற்படுகிறார். 'பையவே சென்று பாண்டியற்கு ஆக' என்றருளினார். பையவே சென்று என்று கூறியதற்குரிய காரணங்களைச் சேக்கிழார் விளக்க முறுத்திக் காட்டுகிறார்.

## பாண்டிநாட்டில்

## அரசியும் அமைச்சரும் கண்டுகளித்த பிள்ளையார்

ஞானத்தின் திருவுருவை
நான்மறையின் தனித்துணையை
வானத்தின் மிசையன்றி
மண்ணில் வளர் மதிக்கொழுந்தை
தேனக்க மலர்க் கொன்றைச்
செஞ்சடையார் சீர்தொடுக்கும்
கானத்தின் எழு பிறப்பைக்
கண்களிப்பக் கண்டார்கள் 85

மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் ஞானசம்பந்தப் பெருமானின் புறக்கோலங் காணார் ஆயினர். பருப்பொருளைப் பண்புக் கூட்டமாகக் காணும் காட்சியைச் சேக்கிழார் அமைக்கிறார்.

## அனல் வாதத்து அற்புதம்

இட்ட ஏட்டினில் எழுதிய செந்தமிழ்ப் பதிகம்
மட்டுலாங் குழல் வனமுலை மலைமகள் பாகத்து
அட்ட மூர்த்தியைப் பொருளென உடைமையால் அமர்ந்து
பட்ட தீயிடைப் பச்சையாய் விளங்கிய தன்றே 86

சமணர்கள் கூறியவாறே அனல் வாதம் தொடங்க, அதனுள் புகலிவேந்தர் ஓர் ஓலை நறுக்கில் "போகமார்த்த பூண்முலையாள்" என்று தொடங்கும் திருநள்ளாற்றுப் பதிகத்தை எழுதி, எரியில் இட்டார். அது பச்சையாக விளங்கித் தோன்றியது.

சமணர்கள் பாலிமொழியில் 'அந்திநாத்தி' என எழுதி இட்டனர்.

சம்பந்தர் இட்ட ஏடு கரிந்து போகாமல் இருந்தது மட்டுமன்று; முன்னை நிலையைவிடப் பச்சையாகவும் இருந்தது. சேக்கிழார் கூறும் காரணம் மூன்று.

1. செந்தமிழ்ப்பதிகம்—தமிழ்மொழியானது அமுதத் தன்மையுடையதாய்த் தன்னைச் சார்ந்தோரை அமரராக ஆக்கவல்ல தன்மையுடையது. இனிமையும் நீர்மையும் தமிழ் 'எனல் ஆகும்' என்ற இலக்கணத்தைக் கொண்டது.

2. மலைமகள் பாகத்து இறைவன் பெண்மையை இணையாக மதித்து, இணைந்து இல்லறமாற்றி, வாழ்வதே முறை என்பதை உலகுக்குணர்த்திய நெறி; உண்மை நெறி; இயற்கையோடு இணைந்தநெறி. சமணர்களுடையது பெண்மையை வெறுத்த நெறி.

சமணர்களுக்கும் ஞானசம்பந்தருக்கும் நடை பெற்ற வாதம் வெறும் சமய வாத மன்று. தமிழக நாகரிகம்,

பண்பு, கலை, ஆகிய அனைத்தையும் அழிக்க எழுந்த இயக்கத்துக்கும், அவைகளை ஆக்க எழுந்த இயக்கத்துக்கும் இடையே நடைபெற்ற வாதமென உணர்க. 'அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல்வழக்கின் துறை வெல்ல'' என்று சேக்கிழார் கூறியதையும் உன்னுக.

## சிவமே உண்மைப் பரம் பொருள்

காய்ந்த ஏட்டில் எழுதப் பெற்ற பதிகம், அந்த ஏடு எரியில் வீழ்ந்த போதும் எரிந்து கரியாகாமல் பசுமையாக இருந்தது.

முதுமை வாய்ந்த உடம்புடையவர் பழுத்த ஓலை: உலகியற் காமங்களில் அவ்வுடம்பை ஈடுபடுத்தினல், காம எரியைத் தாங்காது கருகிப் போகும். இவ்வுலக இன்பம் எதையும் நினைக்கக் கூடமாட்டாதாராய் ஏங்குவர்; இறுதியில் அழிவர். ஏட்டில் பதிகம் எழுதினற் போல, வயதானவர்களுங்கூட, திருநள்ளாற்றுப் பதிகத்தை நாளும் ஓதினல் பழுத்த ஓலை போன்ற உடல் பச்சை ஓலையாக இளமை வாய்ந்த உடலாக மாற்றம் பெறும். காம எரியால் பற்ற முடியாது. இவ்வுலக இன்பங்களை ஆரத் துய்த்து மகிழலாம். என்றும் இளமையோடிருக்கலாம். ஞானசம்பந்தரின் திருநள்ளாற்றுப் பதிகம் ஓதிப் பயனடைக.

## புனல்வாதம் தந்த பொற்பு

**'எம்பிரான் சிவனே எல்லாப் பொருளும்'**
என்று எழுதும் ஏட்டில்
தம்பிரான் அருளால் **வேந்தன்**
**தன்னை முன் ஓங்கப்பாட**
அம்புய மலராள் மார்பன்
'அனபாயன்' என்னுஞ் சீர்த்திச்
செம்பியன் செங்கோல் என்னத்
**தென்னன் கூன் நிமிர்ந்தது அன்றே;** 87

'வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்' என்று தொடங்கும் திருப்பதிகத்தை ஏட்டில் எழுதிப் புனலில் இட்டார். அப்பதிகத்தில் 'வேந்தனும் ஓங்குக' என்றுவரும் தொடரை எழுதியவுடன் அரசனின் கூன் நிமிர்ந்தது. சேக்கிழார் அவன் கூன் நிமிர்ந்ததற்கு, சோழன் அநபாயனின் செங்கோல் போல நிமிர்ந்தது என உவமை காட்டுகிறார்.

சேக்கிழார் இப்பதிகத்துக்கு விரிவாக விளக்கங் கூறியதோடன்றி, வெறியார் பொழில் சண்பையர் வேந்தர் மெய்ப் பாசுரத்தைக்குறி ஏறிய எல்லை அறிந்து கும்பிட்டேன் அல்லேன், சிறியேன் அறிவுக்கு அவர்தம் **திருப்பாதம் தந்த நெறியே** சிறிது நான் அறிந்த நீர்மையில் அன்பால் கும்பிட்டேன் என்று விளக்கங் கூறுவது உய்த்துணரத் தக்கது.

## உலகர் முன் வருக

மண்ணினிற் பிறந்தார் பெறும்பயன் மதிசூடும்
அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல்
கண்ணினல் அவர் நல்விழாப் பொலிவு கண்டு ஆர்தல்
உண்மையாம் எனில் உலகர்முன் வருக'

என உரைப்பார் 88

திருமயிலையில் ஞானசம்பந்தப் பெருமான் எலும்பைப் பெண்ணுக்கிய அற்புதம் நிகழ்த்திய காலையில், அவர்தம் பதிக உட்பொருளை அமைத்துச் சேக்கிழார் அருளிய அமுதப் பாடல் இது. மட்டிட்ட புன்னை என எடுத்து, உருத்திர பல்கணத்தார்க்கு அட்டு இட்டல் காணதே போதியோ பூம்பாவாய் எனவும், பெருஞ்சாந்தி காணதே போதியோ பூம்பாவாய் எனவும் அமைத்த கருத்துக்களை வகைப்படுத்தி அருளுகின்றார்.

### ஈனமாம் பிறவி தீர யாவரும் புகுக

**ஞான மெய்ந் நெறிதான் யார்க்கும்**
**நமச்சிவாயச் சொலாம்** என்று
ஆனசீர் நமச்சிவாயத்
திருப்பதிகத்தை அங்கண்
வானமும் நிலனும் கேட்க
அருள்செய்து இம்மணத்தில் வந்தோர்
**ஈனமாம் பிறவிதீர**
**யாவரும் புகுக''** என்ன 89

நாதனே! நல்லூர் மேவும் பெருமண நம்பனே! உன் பாத மெய்ந்நிழல் சேரும் பருவம் இது என்று பாடிய அவ்வளவில் ''நீயும் பூவையன்னுளும் இங்கு உன் புண்ணிய மணத்துக்கு வந்தார் யாவரும் இங்கே தோன்றும் சோதியில் புகுந்து எம்மிடம் வருக'' என்று இறைவன் அருளினன். திருக்கோயிலைத் தன்னுள் அடக்கிய நிலையில் மேல் எழுந்த பெருஞ் சோதியைக் கண்டு அதனுள் அமைந்த நுழை வாயிலின் சிறப்பையும் கூறி, உலகம் உய்யவும், அனைவர்க்கும் உபதேசமாக அமையவும் நமச்சிவாயத் திருப்பதிகத்தை அருளி, இழிவு அடையக் கூடிய பிறவியை ஒழிக்க இதனுள் யாவரும் புகுக என்று அருளினர்.

### சித்தாந்த நன்முத்தி

காதலியைக் கைப்பற்றிக்
கொண்டு வலங் கொண்டருளித்
தீதகற்ற வந்தருளுந்
திருஞான சம்பந்தர்
நாதன் எழில் வளர் சோதி
நண்ணி அதன் உட்புகுவார்
**போதநிலை முடிந்த வழிப்**
**புக்கு ஒன்றி உடனுனர்** 90

## 40. பரவையார் காட்டிய சமுதாய நலன்

வன்தொண்டர் தமக்களித்த
நெற்கொண்டு மகிழ் சிறப்பார்
இன்றுங்கள் மனை எல்லைக்கு
உட்படு நெற்குன்று எல்லாம்
பொன்தங்கும் மாளிகையில்
புகப் பெய்து கொள்க என
வென்றி முரசு அறைவித்தார்
**மிக்க புகழ்ப் பரவையார்** **91**

சுந்தரமூர்த்திசுவாமிகளுக்குத் தெரியாமலேயே அவரில்லத்துக்கு வேண்டும் அமுதுக்காக நெல் அனுப்பிக் கொண்டிருந்தார் குண்டையூர்க் கிழவர். நெல் தட்டுப்பாடு வரவே, சுந்தரர் அனைத்தையும் உணர வேண்டிய நிலை வந்தது. இறைவனைப் பாடினர். இறைவன் நென்மலையை அளித்தார். எடுத்து வர ஆள் இல்லையே என்று கேட்டார். திருவாரூர்த் தெரு முழுவதும் பூதங்களால் நெல் கொண்டு வந்து சேர்க்கப்பெற்றது. இறைவன் வன்தொண்டருக்காக அளித்த நெல். இந் நிலையிற் பரவையார் அனைத்தையும் தமக்குரியதாக ஓரிடத்திற் சேமித்து வைத்துக் கொள்ள எண்ணவில்லை. அவரவர்கள் வீட்டுக்கு முன்னால் இருக்கின்ற நெற்குவியல்களை அவரவர்கள் எடுத்துக் கொள்ளலாம் என முரசறைந்து தெரிவித்தார்.

## 41. அடியவர்களைப் பூசிக்கும் முறை

### கோட்புலியார் நாவலரைப் பூசித்தல்

தூயமணிப் பொற்றவிசில்
எழுந்தருளி இருக்கத் தூநீரால்
சேயமலர்ச் சேவடி விளக்கித்
தெளித்துக் கொண்டு அச்செழும் புனலால்

மேயசுடர் மாளிகை எங்கும்
விளங்க வீசி உளங்களிப்ப
ஏய சிறப்பில் அர்ச்சனைகள்
எல்லாம் இயல்பின் முறைபுரிவான் 92

பூந்தண் பனிநீர் கொடு சமைத்த
பொருவில் விரைச் சந்தனக் கலவை
வாய்ந்த அகிலின் நறுஞ் சாந்து
வாசம் நிறை மான்மதச் சேறு
தோய்ந்த புகை நாவியின் நறுநெய்
தூய பசுங் கர்ப்பூரமுடன்
ஏய்ந்த அடைக்காய் அமுது இனைய
எண்ணில் மணிப் பாசனத்து ஏந்தி 93

வேறு வேறு திருப்பள்ளித்
தாமப் பணிகள் மிக எடுத்து
மாறிலாத மணித் திருவா
பரண வருக்கம் பல தாங்கி
ஈறில் விதத்துப் பரிவட்டம்
ஊழின் நிரைத்தே எதிரிறைஞ்சி
ஆறுபுனைந்தார் அடித்தொண்டர்
அளவில் பூசை கொள அளித்தார் 94

அடியேன் பெற்ற மக்கள் இவர்
அடிமையாகக் கொண்டருளி
கடிசேர் மலர்த்தாள் தொழுது உய்யக்
கருணை அளிக்க வேண்டும் எனத்
தொடிசேர் தளிர்க்கை இவர் எனக்குத்
தூயமக்கள் எனக் கொண்டு அப்
படியே மகண்மையாக் கொண்டார்
பரவையார் தம் கொழுநனார் 95

கோட்புலியார் நாவலூரரைப் பூசைசெய்து தம்முடைய செல்வியர்களாகிய சிங்கடியார், வனப்பகையார், என்ற

இருவரையும் அவருக்கு அடிமைகளாக, அமைத்துக் கொடுத்து, கருணை செய்ய வேண்டும் என வேண்டுகிறார். திருநாவலூரர் அவர்கள் இருவரையும் தனக்குத் 'தூய மக்கள்' எனக் கொண்டு வேண்டுவ எல்லாம் அவர்களுக்குக் கொடுத்தருளி, அவ்வூர்ப் பதிகத்தில் சிங்கடி அப்பன், வனப் பகை அப்பன் எனத் தம்மை எடுத்தோதி இறைவனை வணங்கினார்.

## 42. பேரூரில் ஆரூரர் கண்ட தில்லைக்காட்சியின் விளைவு

காண்டலுந் தொழுது வீழ்ந்து உடன் எழுந்து
    கரை இல் அன்பு என்பினை உருக்க
பூண்ட ஐம்புலனில் புலப்படா இன்பம்
    புணர்ந்து மெய்யுணர்வினிற் பொங்கத்
தாண்டவம் புரியும் தம்பிரானாரைத்
    தலைப்படக் கிடைத்தபின் சைவ
ஆண்டகை யாருக்கு அடுத்த அந்நிலைமை
    விளைவை யார் அளவறிந்து உரைப்பர் 96

## 43. சங்கிலியார் தொண்டு

அன்பு நாரா அஞ்செழுத்து
    நெஞ்சு தொடுக்க அவர் தொடுத்தே
என்பு உள்ளுருக்கும் அடியாரைத்
    தொழுதுநீங்கி வேறிடத்து
முன்பு போலத் திரைநீக்கி
    முதல்வர் சாத்தும் பணி கொடுத்து
மின்போல் மறையுஞ் சங்கிலியார்
    தம்மை விதியாற் கண்ணுற்றார் 97

நாலாங் குலத்தில் ஞாயிறுகிழவர் திருமகளாராகப் பிறந்த அநிந்திதையார், சங்கிலியார் என்ற பெயருடன் திருப்பள்ளித் தாமத் திருத் தொண்டு செய்து வருகிறார்.

திருவொற்றியூரில் பெருமானை வணங்கி மீளும் ஆரூரர் அவரை விதியாற் கண்ணுற்ற நிலையை இச்செய்யுள் அமைக்கிறது.

### சங்கிலியாரிடம் இறைவன் ஆரூரர் நிலையுரைத்தல்

''சாருந் தவத்துச் சங்கிலி கேள்!
சால என்பால் அன்புடையான்
மேருவரையின் மேம்பட்ட
தவத்தான் வெண்ணெய் நல்லூரில்
யாரும் அறிய யான் ஆள
உரியான் உன்னை எனை இரந்தான்
வார்கொள் முலையாய்! நீ அவனை
மணத்தால் அணைவாய் மகிழ்ந்து'' என்றார்

### சங்கிலியொடு ஆரூரர்

பண்டு நிகழ் பான்மையினால்
பசுபதி தன் அருளாலே
வண்டமர் பூங் குழலாரை
மணம்புணர்ந்த வன் தொண்டர்
புண்டரிகத்தவள் வனப்பைப்
புறங்கண்ட தூநலத்தை
கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று
அமர்ந்திருந்தார் காதலினால் 99

## 44. பறவையிடம் தூது

''நாயன் நீரே, நான் உமக்கு இங்கு
அடியேன் ஆகில் நீர் எனக்குத்
தாயின் நல்ல தோழரும் ஆம்
தம்பிரானாரே யாகில்

ஆய அறிவும் இழந்து அழிவேன்
அயர்வு நோக்கி அவ்வளவும்
போய் இவ்விரவே பரவையுறு
புலவிதீர்த்துத் தாரும்'' என  100

அன்பு வேண்டும் தம்பெருமான்
அடியார் வேண்டிற்றே வேண்டி
முன்பு நின்று விண்ணப்பம்
செய்த நம்பி முகம் நோக்கித்
துன்பம் ஒழி நீ, யாம் உனக்கோர்
தூதன் ஆகி இப்பொழுதே
பொன் செய் மணிப்பூண் பறவைபால்
போகின்றோம் என்றருள் செய்தார்  101

## பரவையார் இசைவு

துளிவளர் கண்ணீர் வாரத்
தொழுது விண்ணப்பம் செய்வார்
ஒளிவளர் செய்ய பாதம்
வருந்த ஓர் இரவு மாறுது
அளிவரும் அன்பர்க்காக
அங்கொடு இங்கு உழல் வீராகி
எளிவரு வீருமானுல்
என் செய்கேன் இசையாது'' என்றுர்

## 45. கலிக்காமர் கலி தீர்வு

கோளுறு மனத்தராகிக்
குற்றுடை வாளைப் பற்ற
ஆளுடைத் தம்பிரானுர்
அருளிஞல் அவரும் உய்ந்து

''கேளிரே யாகிக் கெட்டேன்''
 என விரைந் தெழுந்து கையில்
வாளினைப் பிடித்துக் கொள்ள
 வன் தொண்டர் வணங்கி வீழ்ந்தார் 103

## 46. சாக்கியார் கண்ட
## பல் சமயப் பேராய்வுப் பிழிவு

செய்வினையும் செய்வானும்
 அதன் பயனுங் கொடுப்பானும்
மெய்வகையால் நான்காகும்
 விதித்தபொருள் எனக் கொண்டே
இவ்வியல்பு சைவநெறி
 அல்லவற்றுக்கு இல்லை என
உய் வகையாற் 'பொருள் சிவன், என்று
 அருளாலே உணர்ந்து அறிந்தார் 104

எந்நிலையில் நின்றாலும்
 எக் கோலம் கொண்டாலும்
மன்னிய சீர்ச் சங்கரன் தாள்
 மறவாமை பொருள் என்றே
துன்னிய வேடந் தன்னைத்
 துறவாதே தூய சிவம்
தன்னை மிகும் அன்பினால்
 மறவாமை தலைநிற்பார். 105

காணாத அருவினுக்கும் உருவினுக்குங் காரணமாய்
மின் னாகம் அணிந்தார்க்கு நிகழ் குறியாம் சிவலிங்கம்
நாணாது நேடிய மால் நான்முகனும் காண நடுச்
சேணுறும் தழற்பிழம்பாய்த் தோன்றியது தெளிந்தாராய்
106

## 47. திருத் தொண்டில் மகிழ்வு

இனிய மழலைக் கிண்கிணிக்கால்
இரண்டும் மடியின் புடை இடுக்கிக்
கனிவாய் மைந்தன் கையிரண்டும்
கையாற் பிடிக்கக் காதலனும்
'நனிபேறு உவகை உறுகின்றார்'
என்று மகிழ்ந்து நகை செய்யத்
தனிமா மகனைத் தந்தையார்
கருவி கொண்டு தலை அரிவார் 107

பொருவில் பெருமைப் புத்திரன் மெய்த்
தன்மை அளித்தான் எனப் பொலிந்து
மருவு மகிழ்ச்சி எய்த அவர்
மனைவியாருங் கணவனார்
அருமை உயிரை எனக்களித்தான்
என்று மிகவும் அகமலர
இருவர் மனமும் பேருவகை
எய்தி அரிய வினை செய்தார். 108

பேரோ சிறுத் தொண்டர்; செய்யும் செயலோ பிள்ளையைத் தாய் பிடிக்க, தந்தை அரிதல். இத்தொண்டு தாய், தந்தை, மகன் ஆகிய மூவருக்கும் மகிழ்வு உண்டாக்கச் செய்யப் பெறுகின்றது. மகிழ்வு தோன்றும் முறையைச் சேக்கிழார் அமைத்துக் காட்டும் சொல்லோவியம் நீடு நினைதற்குரியது.

## 48. திருவஞ்சைக் களத்தில் திருத்தொண்டு

(சேரமான் பெருமாள் நாயனார்)

உலகின் இயல்பும் அரசியல்பும்
உறுதியல்ல என உணர்வார்
புலரி எழுந்து புனல் மூழ்கிப்
புனித வெண்ணீற்றினும் மூழ்கி

நிலவு திரு நந்தன வனத்து
நீடும் பணிகள் பல செய்து
மலரு முகையும் கொணர்ந்து திரு
மாலை சாத்த மகிழ்ந்தமைத்து; 109

திருமஞ்சனமும் கொணர்ந்து திரு
அலகும் இட்டுத் திருமெழுக்கு
வரும் அன்புடன் இன்புறச் சாத்தி
மற்றும் உள்ள திருப்பணிகள்
பெருமைபிறங்கச் செய்தமைத்துப்
பேணும் விருப்பில் திருப்பாட்டும்
ஒருமை நெறியின் உணர்வு வர
ஓதிப் பணிந்தே ஒழுகும் நாள் 110

## 49. புகழ்ச் சோழரின் ஆட்சியில் திருநீற்று முதல் நெறி

பிறை வளருஞ் செஞ்சடையார் பேணு சிவாலயம் எல்லாம்
நிறை பெறும் பூசனை விளங்க நீடு திருத் தொண்டர் தமைக்
குறையிரந்து வேண்டுவன குறிப்பின் வழி கொடுத்தருளி
முறை புரிந்து திரு நீற்று முதல் நெறியே பாலிப்பார் 111

## 50. திருநீற்றுப் பெருமை

சீலம் இலரே எனினும்
திருநீறு சேர்ந்தாரை
ஞாலம் இகழ்ந்து அருநகரம்
நண்ணுமல் எண்ணுவார்
பாலணைந்தார் தமக்கு அளித்த
படி இரட்டிப் பொன் கொடுத்து
மேலவரைத் தொழுது இனிய
மொழி விளம்பி விடை கொடுத்தார் 112

தூர்த்தராக வந்த சிவனடியவரை ஏனை அடியவர்கள்
வெறுக்க அது பொழுது, திருநீறணிந்தார் தூர்த்தராயினும்

அவரை இகழ்தலாகாது என்று கூறி, அவலரயும் உபசரித்து இரட்டிப்புப்பொன் கொடுத்து அனுப்பினர்; நரசிங்க முனை யரையர் என்னும் அரசர்.

## 51. அதிபத்தரின் பொருள் துறவு

அகில லோகமும் பொருள் முதற்று
ஆம் எனும் அளவில்
புகலும் அப்பெரும் பற்றினைப்
புரையற எறிந்த
இகலில் மெய்த்திருத் தொண்டர் முன்
இறைவர் தாம் விடைமேல்
முகில் விசும்பிடை அணைந்தனர்
பொழிந்தனர் முகைப்பூ 118

அதிபத்தர் வலைஞர் வலையில் படும் முதல் மீனை இறை வனுக்காக விட்டுவிடுவது என்ற அளவே அவர் தொண்டு. ஒருநாள் உலகு அடங்கலும் விலையாம் பான்மையுடைய அற்புதமுடையதாய் பொன் திரள் சுடர் நவமணி பொலிந்த மீன் முதல் மீனுகக் கிடைத்தது. எனினும் அதை இறை வனுக்கென விட்டு விட்டார். அகில உலகமும் பொருளையே அடிப்படையாகக்கொண்டதுஇவ்வுலகில் அப்பெரும்பெருட் பற்றை மிக எளிமையினல் அறத்துறந்தார் அதிபத்தர்.

## 52. சிவனடியார் வேடமே சிந்தைக்குறுபொருள்

வெறித்த கொன்றை முடியார்தம்
அடியார் இவர்முன் மேவு நிலை
குறித்து வெள்கி நீர் வாரா
தொழிந்தாள் என்று மனங் கொண்டு
மறித்து நோக்கார் வடிவாளை
வாங்கிக் கரகம் வாங்கிக் கை
தறித்துக் கரக நீர் எடுத்துத்
தாமே அவர் தாள் விளக்கினர். 119

திருப்பெண்ணாகடத்தில் கலிக்கம்பர் என்ற வணிகர் சிவனடியார்களை உபசரிக்கும் வழக்கமுடையவர். அவரிடம் முன்னர்ப் பணியாளனாக இருந்து ஓடிப் போனவன் சிவனடியாராக மாற்றம் பெற்று வந்தான். சிவனடியார் என்ற முறையில் உபசரிக்கும் போது கலிக்கம்பரின் மனைவியார், "இவர் நம்மிடத்தில் முன்னே பணி செய்து போனவர் போலும்" என எண்ணி, அதனால் திருவடிப் பூசைக்குக் கரக நீர் எடுக்கக் காலந் தாழ்த்தது உணர்ந்த கலிக்கம்பர் மனைவியின் கையைத் துணித்தார். கரக நீரைத் தாமே எடுத்து அடியவர் திருவடிகளை விளக்கினார்.

## 53. தொண்டராம் குணமுடையார்

நின்றாலும் இருந்தாலும் கிடந்தாலும் நடந்தாலும்
மென்றாலும் துயின்றாலும் விழித்தாலும் இமைத்தாலும்
மன்றாடு மலர்ப்பாதம் ஒரு காலும் மறவாமை
குன்றாத உணர்வுடையார் தொண்டராம் குணம் மிக்கார். 115

## 54. நினைவுக் கோயிலின் நீள் புகழ்

நின்றவூர்ப் பூசல் அன்பன்
நெடிதுநாள் நினைந்து செய்த
நன்று நீடு ஆலயத்து
நாளை நாம் புகுவோம் நீ இங்கு
ஒன்றிய செயலை நாளை
ஒழிந்து பின் கொள்வாய் என்று
கொன்றைவார் சடையார் தொண்டர்
கோயில் கொண்டருளப் போந்தார். 116

இறைவனும் காலந்தவறாக் கட்டுப்பாடுடையவன்: காலங்கடந்த பரம் பொருளாயினும் காலத்தொடு படுத்திக் கொண்ட அவன், காலத்தையும் கடமையையும் முறைப்

படுத்திச் செயலாற்றியதைப் பூசலார் நாயனுர் புராணத்தால் அறியலாம்.

## 55. மங்கையர்க்கரசியார்

மங்கையர்க்குத் தனியரசி எங்கள் தெய்வம்
வளவர்த் திருக் குலக்கொழுந்து வளைக்கை மானி
செங்கமலத் திருமடந்தை கன்னி நாடாள்
தென்னர் குலப் பழி தீர்த்த தெய்வப் பாவை
எங்கள் பிரான் சண்பையர் கோன் அருளினலே
இருந்தமிழ்நாடு உற்ற இடர் நீக்கித் தங்கள்
பொங்கொளி வெண் திருநீறு பரப்பினரைப்
போற்றுவார் கழல் எம்மால் போற்றலாமே 117

## 56. தொண்டாற்றும் முறை
## நேச நாயனுர்

ஆங்கவர் மனத்தின் செய்கை
அரனடிப் போதுக்கு ஆக்கி
ஓங்கிய வாக்கின் செய்கை
உயர்ந்த அஞ் செழுத்துக்கு ஆக்கி
தாங்குகைத் தொழிலின் செய்கை
தம்பிரான் அடியார்க் காகப்
பாங்குடை உடையுங் கீளும்
பழுதில் கோவணமும் நெய்வார் 118

## 57. கோச் செங்கண்ணுன் தாய் செய்த சைவத் தொண்டு

"பிறவாது ஒரு நாழிகை கழித்து
என் பிள்ளை பிறக்கும் பரிசு என்கால்
உற ஆர்த்து எடுத்துத் தூக்கும்"
உற்ற செயல் மற்று அது முற்றி

அறவாணர்கள் சொல்லிய காலம்
அணையப் பணிவிட்டு அருமணியை
இறவாது ஒழிவாள் பெற்றெடுத்து
"என் கோச் செங்கண்ணனே!" என்றாள். 119

எண் தோள் ஈசற்கு எழுபது மாடம் கட்டி, திருநீற்று முறைப்படி அரசியற்றிய கோச்செங்கண்ணனைப் பெற்ற தாய் இயல்புக்கு மேலாக, அவனைச் சுமந்து, அத்துன்பத்தை அன்று ஆற்றியிருக்க ஒருப்படாள் ஆயின் இன்று சைவத் திருக் கோயிலேது?

### 58. பாணருக்கு மூலத்தானத்தில் இடம்

கோயில் வாயில் முன்னடைந்து
கூற்றஞ் செற்ற பெருந்திறலும்
தாயின் நல்ல பெருங்கருணை
அடியார்க்கு அளிக்கும் தண்ணளியும்
ஏயும் கருவியில் தொகுத்து அங்குக்
இட்டுப் பாடக் கேட்டு அங்கண்
வாயில் வேறு வடதிசையில்
வகுப்பப் புகுந்து வணங்கினார்; 120

### 59. ஆரூரரின் சிவஞானத் திருமேனி

படியில் நீடும் பத்திமுதல்
அன்பு நீரிற் பணைத் தோங்கி
வடிவு நம்பி யாரூரர்
செம் பொன் மேனி வனப்பாகக்

கடிய வெய்ய இருவினையின்
களைகட்டு எழுந்து கதிர் பரப்பி
முடிவு இலாத சிவ போகம்
முதிர்ந்து முறுகி விளைந்ததால். 121

## 60. என்றும் இன்பம் பெருக

என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்
ஒன்று காதலித்து உள்ளமும் ஓங்கிட
மன்றுளார் அடியார் அவர் வான்புகழ்
நின்றது எங்கும் நிலவி உலகெலாம். 122





உ

திருச்சிற்றம்பலம்

## சேக்கிழார் துதி

—o—

நூக்கு சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி
வாக்கினுற் சொல்ல வல்லபிரான் எங்கள்
பாக்கியப் பயனுப்பதி குன்றை வாழ்
சேக்கிழான் அடி சென்னி இருத்துவாம்

—காஞ்சிப்புராணம்

தொகையா நாவ லூராளி
தொடுத்த திருத்தொண் டப்பெருமை
வகையால் விளங்க உயர் நம்பி
யாண்டார் வகுப்ப மற்றதனைத்
தகையா அன்பின் விரித்துலகோர்
தம்மை அடிமைத் திறப்பாட்டின்
உகையா நின்ற சேக்கிழான்
ஒளிர்பொற் கமலத் தாள்பணிவாம்

—திருவானைக்காப்புராணம்